# பிளேக் நோயுடன் போராட்டம்!

**சூரத் நகரில் உள்ள பிராந்திய பொறியியல் கல்லூரியில் படிக்கும் சுவாமிநாதன் 'தப்பினோம் பிழைத்தோம்' என்று சென்னைக்கு ஓடி வந்திருக்கிறார். செப்டம்பர் 22 காலை நாளிதழைப் பார்க்க, இவருக்கும் சக மாணவர்களுக்கும் ஷாக். சொல்கிறார் :**

"ஹாஸ்டலில் எல்லோருக்கும் உடனே டெட்ராசைக்ளின் மாத்திரைகள் விநியோகிக்கப்பட்டன. அன்று கல்லூரி விடுமுறை என்றும் யாரும் வெளியே செல்லக் கூடாது என்றும் உத்தரவு. ஆயினும் வதந்திகள் மட்டும் எப்படியோ வந்து சேர்ந்தன, 'நூற்றுக்கணக்கில் பிளேக் நோயினால் மக்கள் மடிகிறார்கள்' என்று. அன்றிரவே கல்லூரியும் ஹாஸ்டலும் மூடப்படுவதாக நிர்வாகிகள் கூற, அதிர்ச்சி!

• சுவாமிநாதன்

"'சூரத் ரயில் நிலையத்தில் கூட்டம் பிதுங்குகிறது; ரயில்கள் நிற்காமல் ஓடுகின்றன' என்றெல்லாம் கேள்விப்பட்டு இரவெல்லாம் நடந்து, சச்சின் ரயில் நிலையம் அடைந்து, ரயில் மாறி, பம்பாய் போய், அங்கிருந்து விமானம் ஏறிச் சென்னை வந்து சேர்வதற்குள் போதும் போதுமென்றாகிவிட்டது.

"ஏர்போர்ட்டில் மறுபடி டெட்ராசைக்ளின் மாத்திரை தந்தனர். என் பெற்றோர் என்னைப் பார்த்த பிறகும் பயமும் கலவரமும் நீங்கப் பெறாமல் அழ, அவர்களை ஆசுவாசப்படுத்துவதே பயணக் களைப்பைவிட அதிக சிரமமாயிருந்தது!"

• எலி ஆராய்ச்சி

**பி**ளேக் நோய் என்பது என்ன? வேறு பல நோய்கள் போல கிருமிகளால் வருவதுதான். இக்கிருமிகள் முதலில் எலிகளைத் தாக்குகின்றன. எலிகளில் ஒட்டிக் கொண்டு அவற்றின் ரத்தம் உறிஞ்சி வாழும் உண்ணிகளுக்கு இந்த நோய் பரவுகிறது. உண்ணிகள் நோய் உபாதை தாங்க முடியாமல் வெறி கொண்டு மனிதர்களையும் கடித்து ரத்தம் உறிஞ்ச, கிருமிகள் மனிதனுக்கும் பரவுகின்றன. குளிர் காய்ச்சல், ரத்தம் கலந்த சளியுடன் இருமல், நெறி கட்டுதல் முதலியன பிளேக் நோயின் அறிகுறிகள். உடனடியாக டாக்டரை அணுகி மருந்து உண்டால் குணமடையலாம்.

"குஜராத், மகாராஷ்டிரா மாநிலங்களிலிருந்து வரும் பயணிகளை

• பிளேக் பாதிப்பு : மருத்துவமனைக்குத் தூக்கிச் செல்கிறார்கள். (படம் நன்றி : மெட்ரோபோலிஸ்)



"உழைப்புக்கேத்த ஊதியத்தை கொடுன்னு, கம்பெனி போராட்டத்திலே கத்தினது தப்பாப் போச்சு..."

"ஏன்...?"

"சம்பளத்தைக் குறைச்சிட்டாங்க..."

- ஆர். வசந்தகுமார்

எல்லாம் மாநகராட்சி, ரயில் நிலையத்திலும் விமான நிலையத்திலும் பரிசோதித்து, பெரியவர்களுக்கு டெட்ராசைக்ளின் மாத்திரைகளும் குழந்தைகளுக்கு சல்ஃபனமைட் மாத்திரைகளும் இலவசமாக வழங்குகிறது" என்றார் டாக்டர் குகானந்தம். "ஐந்து நாட்களுக்கான மாத்திரைகள் தந்து விழுங்கச் சொல்கிறோம். இதுவரை பிளேக் அறிகுறிகளை இங்கு யாரிடமும் காணவில்லை என்றாலும் இந்த முன்ஜாக்கிரதையான தடுப்பு நடவடிக்கை மிகவும் அவசியம். வரும் பயணிகள் ஒத்துழைக்க வேண்டும். நோய் பரவுதலை இதன் மூலம் கட்டுப்படுத்தி விடலாம். பக்க விளைவு ஏதும் ஏற்படாது."

எலிகள் ஆங்காங்கே செத்துக் கிடப்பது (Rat fall) பிளேக் நோய் பரவப் போகிறது என்பதற்கு ஆரம்ப அறிகுறி. முன்னொரு காலத்தில் லண்டனில் பிளேக் நோய் பரவ, ஆயிரக்கணக்கானவர்கள் மடிந்தனர். ஆனால் அன்று பிளேக் நோய்க்கு மருந்து கிடையாது. இன்று மருந்து மட்டுமின்றி தடுப்பு ஊசியும் உண்டு.

அரசாங்கம் மருந்துக்குத் தட்டுப்பாடு இன்றியும் விலை உயராமலும் பார்த்துக் கொள்வதுடன் மருந்து வாங்கச் சக்தியற்ற ஏழைகளுக்கு இலவசமாகக் கிடைக்கவும் வகை செய்ய வேண்டும். கணிசமாக மருந்து இறக்குமதி செய்தும் தயார் நிலையில் இருப்பது அவசியம்.

தகவல், தொகுப்பு :

**நமது நிருபர்கள்**

---

பேபி நிலா

பத்து நாள் லீவுதானே? நவராத்திரி நெருங்கிடுச்சு. பொம்மையெல்லாம் எடுத்துத் துடைச்சு வைப்பேன்.

இதை மட்டும் இனி கொலுல வைக்கவே கூடாது!

இங்கிலீஷ் மீடியம் ஸ்கூல்ல எப்பல்லாம் ஹாலிடே விடுறாங்களோ, அப்பல்லாம்தான் அம்மாவும் பஸ் ஓடாதுன்னு அறிவிக்கிறாங்க. எனக்கு ஒரு நாள் லீவு போச்சு!

அசடே! காந்தி ஜெயந்தி ஞாயிற்றுக் கிழமைல வந்ததுன்னு காந்தி பொம்மையையும் விட்டெறிஞ்சுடாதே! சமத்தா இரு!



• சத்யராஜ்குமார்



• வே. குருநாதன்.



• ராஜ்கோகுல்



• திருமதி. பானுகுமார்

# பரிசு பெற்ற அழகுப் பார்வைகள்!

ஒரு தனிமனிதனின் சமூகஞ்சார்ந்த உறவுகள் எப்படியிருக்கின்றன; அல்லது எப்படி இருக்க வேண்டும் என்பதைத் தெள்ளத் தெளிவாகக் காட்டுபவைதான் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் இந்த ஆண்டு பரிசு பெற்ற நான்கு கதைகளும்.

ஒரு மூன்றாவது நபரின் இழப்பு ஒரு போதும் சுயதுக்கமாகாது; அது 'அந்நிய துக்கம்' என்பதே யதார்த்தம். இதைக் கொஞ்சமும் மிகையில்லாமல் சொல்வதுதான் முதல் பரிசு பெற்ற 'அந்நிய துக்கம்'. இப்படியொரு இயல்பான விஷயத்தைத் தெளிவான பார்வையோடு சொல்லும் சத்யராஜ் குமார் (புனைபெயர் அல்ல; இயற்பெயர்தான்), "இதுவரை 87 சிறுகதைகள், நான்கு நாவல்கள் பல்வேறு பத்திரிகைகளிலும் வெளியாகியிருக்கின்றன; கூடவே ஆசிரியர் சாவி அவர்களின் பாராட்டையும் பெற்றிருக்கிறேன்!" என்று பெருமையோடு குறிப்பிடுகிறார்.

இந்த 27 வயது இளைஞர் ராஜேஷ்குமாரின் கதைகளைப் படித்துப் படித்துத் தான் எழுத்தார்வம் பெற்றாராம். மெக்கானிகல் இன்ஜினியரிங்கில் பட்டம் பெற்றவர். இதன் காரணமாகவோ என்னவோ, சமூகக் கதைகள் எழுதுவதை விட சயன்ஸ் கதைகள் எழுதிப் புகழ்பெறுவதே தமது லட்சியம் என்று கூறுகிறார். இவர் தமது லட்சியத்தில் வெற்றி பெற வாழ்த்துவோம்:

இரண்டாம் பரிசுக் கதையான 'புதிய நெருப்பு, அஹிம்சையைப் புதியதொரு கோணத்தில் அறிமுகப்படுத்துகிற கதை. இதன் ஆசிரியர் வே. குருநாதன். சென்ற ஆண்டு இதே போட்டியில் முதல் பரிசு பெற்ற இவர், கல்கி வாசகர்களுக்கு ஏற்கெனவே அறிமுகமானவர்தான் என்பதால் அதிகம் சொல்லத் தேவையில்லை.

இவருக்கு எழுத்தும் எழுதுவதுமே சுகம். "அதுவும் எனது கிராமத்தின் பல்வேறு பிரச்னைகளுக்குக் கதை வடிவம் தந்து, என் எண்ணங்களை வெளிப்படுத்துவதில் எனக்கொரு ஆத்ம சுகம் கிடைக்கிறது!" என்கிறார் இந்த முப்பத்தைந்து வயது இளைஞர்.

மூன்றாம் பரிசைப் பகிர்ந்து கொண்ட ராஜ்கோகுல் (எஸ். ராஜேந்திரன்), திருமதி பானுகுமார் ஆகியோரும் கல்கி வாசகர்களுக்கு நன்கு அறிமுகமானவர்கள்தான்.

'தவம்' எழுதிய ராஜ்கோகுல், "எழுதறதையே மறந்துடுவீங்க போலிருக்கே?" என்று மனைவி வற்புறுத்தும் போது மட்டுமே எழுதுவதாகச் சொல்கிறார்.

இதுவரை நாற்பது சிறுகதைகள் எழுதியிருக்கிறார். அவற்றில், "பெரும்பாலானவை கல்கியில்தான் பிரசுரமாகியிருக்கின்றன!" என்கிறார். மேலும், "நான் குறைவாக எழுதுவதற்குக் காரணம், எனது கதைகளில் கற்பனையின் சதவீதம் குறைவு; முடிவு பாஸிடிவாக இருக்க வேண்டுமென்கிற பிடிவாதம் ஆகியவையே!" என்கிறார்.

'தலைக்கு மேல் ஒரு கூரை'யின் ஆசிரியர் திருமதி பானுகுமார் படித்தது பி.ஏ. ஆங்கில இலக்கியம். ஐந்தாம் வகுப்பு வரை மட்டுமே தமிழ் படித்தார்; பிறகு ஆங்கிலமும் இந்தியும் தான் என்றாலும் "தமிழில் எழுதுவதும் சிந்திப்பதும்தான் சுவாசிப்பது போல எனக்கு இயல்பாக இருக்கிறது!" என்கிறார் இந்த பம்பாய்த் தமிழர். இதுவரை நாற்பது சிறுகதைகள் எழுதியுள்ள இவருக்கு ஒரு குறை: "நன்றாக இலக்கியத் தமிழ் கற்கவில்லையே!" ஆனால் பள்ளியிலும் கல்லூரியிலும் கற்றால் தான் கல்வியா என்ன? இன்றே தொடங்கிடுங்கள் பானு!

பரிசு பெற்ற நால்வருக்கும் மீண்டும் நமது வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

- ஆசிரியர்



# நடந்தேன்; நெகிழ்ந்தேன்!

குமரி - சென்னை - 51 நாட்கள் - 1500 கி.மீ. பயணத்தில்தான் எத்தனை நெகிழ்ச்சியான அனுபவங்கள்!

●● நெல்லை மாவட்டம் மஹாராந்தையில் கல்யாண மண்டபம், அரங்கம் என்று ஏதுமில்லை. திறந்த வெளியில் தங்கியிருந்த போது பலத்த மழை பிடித்துக் கொண்டது. உடனே ஒரு கிறிஸ்துவ தாழ்த்தப்பட்ட தோழரின் அழைப்பின் பேரில், அவரது ஐந்துக்கு ஐந்து குடிசையில் நான் தங்கினேன். அந்தக் குடும்பத்தாரின் அன்பும் பாசமும் என் கண்களில் நீர் வரவழைத்து விட்டது! ஊர் மக்கள் எல்லோருமே தங்கள் தங்கள் குடிசைகளில் என்னுடன் வந்த தோழர்களுக்கு இடமளித்து உபசரித்தனர். என்னால் மறக்க முடியாத இரவு இது!

●● அப்துல் சுபான் என்கிற சித்த வைத்தியர் தர்மபுரியைச் சேர்ந்தவர். குமரி முதற்கொண்டு என்னுடன் நடந்து வந்தவர். ஊரிலிருந்து திடீரென்று ஒரு தந்தி!

"உங்கள் மருமகளை பிரசவத்திற்காக ஆஸ்பத்திரியில் சேர்த்திருக்கிறோம்" - உடனே ஊருக்கு விரைந்தார் அவர். சென்ற ஐந்தாம் நாள் மீண்டும் வந்து பயணத்தில் கலந்து கொண்டார். "மருமகள் எப்படி இருக்கிறார்?" என்று விசாரித்தேன்.

'அவ இறந்துட்டா' என்று அவர் சொன்ன போது என் சகோதரி இறந்தது போன்ற உணர்வு எனக்கு! எவ்வளவு சொல்லியும் கேட்காமல், சென்னை வரை நடந்து வந்து பின்னர் தான் ஊருக்குச் சென்றார்.



அதே போல் அப்பா இறந்த சோகத்திலும் தொடர்ந்து நடந்த சோமலூரர் சேகர். சொல்லுங்கள்! இவர்களை மறக்க முடியுமா?

●● சின்ன கணியமுத்தூர் கிராமம் பழநி அருகில் உள்ளது. ஒன்பதாவது படிப்பவன் கார்த்திகேயன். நான் அந்த


> "
> 'அவ இறந்துட்டா' என்று அவர் சொன்ன போது என் சகோதரி இறந்தது போன்ற உணர்வு எனக்கு!
> "

ஊரைத் தாண்டி சில கி.மீ. வந்தவுடன் 'என்னுடன் நடைப் பயணத்தில் கலந்து கொள்வேன்' என்று அடம் பிடித்திருக்கிறான். என்னிடம் அவனை அழைத்துக் கொண்டு வந்தார்கள். நான் பலவிதமாக அறிவுரை கூறியும், பிடிவாதம் பிடித்து, என்னுடன் சென்னை வரை நடந்தான்.

●● காட்டுக் கோட்டை என்ற ஊரில் பள்ளிக்கூடக் குழந்தைகள் 300 பேர் சாலையின் இருபுறமும் அணிவகுத்து நின்று வரவேற்பதைப் பார்த்ததும் எனக்குப் பகீரென்றது. உடனே ஆசிரியர்களைக் கூப்பிட்டு, 'எந்த அரசியல் தலைவருக்காகவும் பள்ளிப் பிள்ளைகளை நோகடிக்காதீர்கள்' என்று சொல்லிவிட்டு வந்தேன். அதன்பின் எனது தோழர்களிடம், பள்ளிப் பிள்ளைகள் வரவேற்கக் காத்திருந்தால், நான் செல்லும் முன்பே, அவர்களை பள்ளிக் கூடத்திற்குள் அனுப்பி வைத்து விடவும்' என்று சொல்லி வைத்தேன்.

●● நடைப் பயணத்தில் மருத்துவ உதவி புரிய வந்த டாக்டர் செங்குட்டுவன் சாலை விபத்தில் இறந்தது. பொள்ளாச்சியில் சேரன் போக்குவரத்து ஊழியர் எனக்கு மாலை வாங்கச் செல்லும் போது உயிரை இழந்தது. திண்டிவனம் அருகே வக்கீல் ரங்கன் மீது கார் மோதி அவர் உயிரை விட்டது. மனத்தில் ரணமாய் வாழ்க்கை முழுவதும் இருக்கப்போகும் சோகங்கள்....

●● நடைப் பயண நாட்களில், என் தோழர்களே எனக்குக் குடும்பமாய் இருந்து காத்தனர். என் அம்மா ஒருமுறை பார்க்க வந்துவிட்டு, நான் ஏதோ உட்புற கிராமத்துக்குச் சென்றுவிட்ட படியால் சந்திக்காமல் திரும்பிவிட்டார். கோயமுத்தூரைக் கடக்கும் போது அங்கே படிக்கும் என் மகனைக் கூட நான் பார்க்கவில்லை!

மொத்தத்தில் இந்த நடைப்பயணம் என்னை மேலும் பக்குவப்படுத்தியது மட்டுமல்லாமல், சமுதாயத்துக்கு நான் செய்ய வேண்டிய கடமைகள் மிகவும் அதிகம் என்பதையும் உணர்த்தியிருக்கிறது.

சந்திப்பு : ஸ்ரீநிவாசன்





• துரிதமான பாலக் கட்டுமானம்

• கௌரி

உலகத் தமிழ் மாநாடு

# கதிகலங்கிப் போயிருக்கும் தஞ்சைவாசிகள்!

உலகத் தமிழ் மாநாட்டினையொட்டி தஞ்சையில் நடக்கிற களேபரங்களால் கதி கலங்கிப் போயிருக்கிறார்கள் தஞ்சாவூர் வாசிகள்.

ஒரு பக்கம் ராட்சஸ வேகத்தில் சாலைகளைத் தோண்டி, சீரமைப்புப் பணிகளால் போக்குவரத்து தடுமாற, மறுபக்கம், கிடைத்த இடங்களிலெல்லாம் கல், ஜல்லி இறக்கி கட்டுமானப் பணிகள். தவறாமல் கட்அவுட்கள், அலங்கார வளைவுகள். போஸ்டர் புரட்சி இன்னபிற.

இந்த சாக்கிலாவது நகருக்குச் சாலை போடுவதும் இதர வசதிகள் வருவதும் சந்தோஷப்படக்கூடிய விஷயங்கள்தான். எனினும், "அத்தனையிலும் ஊழல் புகுந்து தாண்டவமாடுகிறது" என்று குமுறுகிறார் பேராசிரியர் சீனிவாச நாராயணசாமி. தஞ்சை சரபோஜி கல்லூரிப் பேராசிரியரும் நுகர்வோர் பாதுகாப்புக் குழுத் தலைவருமான இவர் தரும் தகவல்கள் பெரும் அதிர்ச்சி அளிப்பவையாய் இருக்கின்றன.

"சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த ஊர் என்றாலும் மன்னர் காலப் போர் சிதைபாடு களிலிருந்து இன்னும் மாறாத நிலையிலேயே உள்ளது! It is not a planned City. பெங்களூரைப் போல, மைசூரைப் போல, சென்னையின் சில பகுதிகள் போல இல்லை. குறுகலான சாலைகள். அதிலும் ஏராள ஆக்கிரமிப்புகள். காவிரி பாயும் பூமி தானென்றாலும் ஊரில் தண்ணீர்ப் பஞ்சத்திற்கு எப்போதும் குறைவு கிடையாது. சாலையிலேயே சாக்கடைகளைப் பார்க்கலாம். மலேரியாவுக்குப் பேர் போன பிரதேசம்.

"தமிழ் மாநாடு - ஜெயலலிதா வருகிறார் என்பதால் இதிலிருந்தெல்லாம் பரிபூரண விடுதலை கிடைக்காதா என்ற ஆசையில் எங்கள் கோரிக்கைகளை அரசுக்குச் சமர்ப்பித்தோம்.

"தமிழை வளர்ப்பது முக்கியம்தான். தமிழர்களையும் கொஞ்சம் கவனித்தால் தப்பில்லையே?" என்று சிரிக்கிறார்.

இவர்களது கோரிக்கை என்ன?

மாநாட்டுக்கு 15 லட்சம் பேர் வரக்கூடும் என்று அரசுத் தகவல் சொல்லுகிறது. அத்

தனை பேரைத் 'தாங்கும்' வலுவை நகருக்கு வழங்க வேண்டும். அதாவது, அடிப்படை வசதிகளைச் சீரமைப்பதுடன் அதிகப்படுத்தவும் வேண்டும்.

மங்கலுக்கு இச் சாலை உபயோகம் எனினும், "மாநாடு நடக்கவிருக்கிற நகருக்குள்ளேயே அநேக சீரமைப்புப் பணிகள் பாக்கியிருக்க, சுற்றுப் பாதையில் ஏன் வீண் விரயம்?" என்கிறார் தஞ்சை ராமமூர்த்தி. உள்ளூரில் பிரபல வழக்கறிஞர்.

இதைவிட காமெடி - "இன்று சீரமைப்புப் பணிகள் நடைபெறுகிற



• 5 ஸ்டார் ஹோட்டல் உருவாகிறது...



• பாரத் ரவீந்திரன்

இரண்டாவது - தமிழ் வளர்த்த தஞ்சையில் நடக்கவிருக்கிற தமிழ்மாநாட்டில் என்னதான் உண்மையிலேயே செய்யப் போகிறார்கள் என்கிற முழு விவரம் தர வேண்டும். அதாவது ஒரு வெள்ளை அறிக்கை.

**சா**லை போடுவது பிரதானப் பணியாக - முழு மூச்சாக - நடந்து வருவதைப் பார்க்க முடிந்தது.

ஆனால் உலகத் தமிழ் மாநாட்டை ஒட்டிப் போடப்படும் இச் சாலைகளுக்கான அனுமதி சில வருடங்களுக்கு முன்பே வழங்கப்பட்டவை. தஞ்சை நகர வாசிகளின் கேள்வி இதுதான் :

பல வருடங்களுக்கு முன் கிடைத்த அனுமதியைக் கொண்டு இப்போது சாலை போடப்படுகிறதா? அல்லது தமிழ் மாநாட்டுக்காகவா? தமிழ் மாநாட்டுக்கெனில், முன்பு கிடைத்த அனுமதியும், ஒதுக்கப்பட்ட லட்சக்கணக்கிலான பணமும் என்ன ஆயின?

அல்லது அந்த அனுமதிதான் இப்போது செயலாக்கப்படுகிறதென்றால் - தமிழ் மாநாட்டு 'பேனர்' எதற்கு?

இது ஒரு பக்கம் இருக்க, தமிழ் மாநாட்டுச் சாக்கில் நகரைச் சுற்றி ஒரு சுற்றுப் பாதை (Ring Road) போடுகிறார்கள். பல கிரா

சாலைகளெல்லாம் மார்ச் '94ல் ஜெயலலிதாவின் தஞ்சை விஜயத்தின் போது துப்புறவாகச் செப்பனிடப்பட்டவைதான். அதை மறுபடி தோண்டி புனர் நிர்மாணம் செய்வானேன்?" என்கிறார் சீனிவாச நாராயணசாமி.

**சா**லைப் பணிகள் தவிர பல கட்டுமானங்களும் ஆங்காங்கே கண்ணில் தென்பட்டன. இதில் சில ஸ்டார் ஹோட்டல்களும், மணிமண்டபமும், வானளாவிய 'டவரும்', மேம்பாலமும் அடக்கம்.

முதலில் ஸ்டார் ஹோட்டல் விவகாரம் : அரசாங்க நிலத்தை, நீண்ட நாள் குத்தகைக்குத் தனியாரிடம் கொடுத்து, (மாநாட்டை ஒட்டி) நட்சத்திர ஹோட்டல்கள் கட்டச் சொல்லியிருக்கிறார்கள். உள்ளூரில் கட்டப்படுகிற இந்த வகை ஹோட்டல்கள் தவிர, திருச்சியிலும் ஓரிரு கட்டுமானங்கள் நடப்பதாகச் சொல்கிறார்கள்.

எதற்கு?

மாநாட்டுக்கு வரப் போகும் வி.ஐ.பிக்கள் தங்குவதற்கு!

"தஞ்சாவூருக்குச் சுற்றுலா வருபவர்கள் பெரும்பாலும் இங்கு தங்குவதில்லை. திருச்சியில்தான் தங்குகிறார்கள். அதுதான் வசதியும்



• தஞ்சை ராமமூர்த்தி

கூட. அப்படியிருக்க, இங்கு ஸ்டார் ஓட்டல்கள் கட்டுவதில் டெண்டர் எடுப்பவர்களைத் தவிர யாருக்கு லாபம்?'' என்கிறார் கல்லூரி மாணவியான ஜெயஸ்ரீ.

''இந்தக் கேள்



• ஜெயஸ்ரீ

வியை அரசுத் தரப்பிலும் கேட்டோம். முடிஞ்சா ஹோட்டல் நடத்துங்க; இல்லாட்டி ஆஸ்பத்திரியா மாத்திடுங்க என்று பதில் சொல்கிறார்கள்'' என்கிறார், நமசிவாயம். நுகர்வோர் பாதுகாப்புக் குழுச் செயலாளர்.

ஹோட்டல் தமிழ்நாடுவின் annexe ஒன்றை இது தொடர்பாகத் தனியாரிடம் தந்திருக்கிறார்கள் - ஸ்டார் ஹோட்டலாகக் கட்ட.

''அரசு ஓட்டலான 'ஓட்டல் தமிழ்நாட்டை' தனியாருக்குத் தாரை வார்ப்பது எந்த சட்டப்படி செல்லும்?'' என்கிறார் நாராயணசாமி.

இதுதவிர, நாகப்பட்டினம் சாலையில் ஒரு பெரிய டவர் (கோபுரம்) கட்டப்படுகிறது.

எதற்கு?

மாநாட்டுக்கு 'அணி திரண்டு வரும்' பொது ஜனங்களை ஜெ. அந்த டவர் மீதேறிப் பார்வையிடப் போகிறாராம்! இதற்காக 'லிஃப்ட்' வசதியுடன் தயாராகிறது அந்த டவர்!

''இதென்ன ஆயிரம், ரெண்டாயிரம் கணக்கா? எத்தனை லட்சங்கள் தெரியுமா?'' என்று சீறுகிறார் கௌரி. பிறிதொரு கல்லூரி மாணவி.

"ஒரு மணி நேரம் அவர் (ஜெ) ஏறி நின்று பார்ப்பதற்கு இத்தனை ஆடம்பர கோபுரம் அவசியம்தானா?'' என்கிறார்கள்.

முதல் கட்டத் தொகையாக, 85 லட்சம் செலவில் நகருக்கு வெளியே மாநாட்டுப் பந்தலுக்குப் போகிற சாலையருகே ஒரு புதிய பேருந்து நிலையம் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். "நகர மக்களுக்குத் துளியும் பயன்படாமல் எங்கோ கொண்டு போய், ஒரு பேருந்து நிலையம் கட்டுவதற்குப் பதில், இருக்கிற பேருந்து நிலையத்தைப் பழுது பார்க்கலாமே!'' என்கிறார் பாரத் ரவீந்திரன். அரிமா சங்கத் தலைவர்.

"உலகத் தமிழ் மாநாட்டுச் செலவாக 80 கோடி ரூபாய் அறிவித்திருக்கிறார்கள். இதில் ஒரு பகுதியை யுனெஸ்கோ தருகிறது. இம்மா பெரும் தொகை வீண் விரயமாகாமல், மக்களுக்கு உள்ளபடியே பயன்படும் விதமாக அமைய - அரசு சாரா அலுவலர்கள் கொண்ட (என்.ஜி.ஓ) ஒரு மேற்பார்வைக் குழு அமைக்க அரசிடம் கேட்டோம். பலனில்லை. பலமுறை தொடர்ந்து வற்புறுத்தவே, எஸ்.டி.எஸ். போதுமான கால அவகாசம் தராமல் சில என்.ஜி.ஓக்களை திடீரென்று கூட்டிப் பேசியிருக்கிறார். இது ஒரு அரசு நடத்தும் மாநாடு; மக்கள் பங்கு இதில் அதிகம் என்பதையே கருத்தில் கொள்ளாமல் கட்சிக் கூட்டம் மாதிரி ஏற்பாடு பண்ணிக் கொண்டிருக்கிறார்கள்'' என்கிறார்கள் பல தஞ்சாவூர் வாசிகள்.

'அரசுத் தரப்பில் இதற்கெல்லாம் என்ன பதில்?' என்பதை அறிய தஞ்சை மாவட்டக் கலெக்டரைத் தொடர்பு கொண்ட போது, "இதற்கென சில சிறப்பு

---



''அந்த ரியல் எஸ்டேட்காரங்க இப்படி ஏமாத்துவாங்கன்னு நான் நினைச்சுக் கூடப் பார்க்கல்லே.''

''ஏன், என்ன நடந்திச்சு?''

''ப்ளாட்டை விக்கறப்போ 'ரயில்வே ஸ்டேஷன்லேருந்து அஞ்சு நிமிஷத்திலே வீட்டுக்குப் போயிடலாம்'ன்னாங்க. ஆனா வீட்டுக்குப் போறதுக்கு ஒரு மணி நேரமாவுது. போய்க் கேட்டா, 'உங்களை யாரு நடந்து போகச் சொன்னது, கார்லே போக வேண்டியதுதானே'ன்னு சொல்றாங்க!''

— டி. என். பாலகிருஷ்ணன்

அலுவலர்கள் (Special Officers) இருக்கிறார்கள், அவர்களைப் பாருங்கள்" என்று கை விரித்து விட்டார்.

நகராட்சி சிறப்பு அலுவலர் பாலசந்திரனைப் பலமுறை தொடர்பு கொண்டும் சந்திக்க இயலவில்லை. ('இப்ப பாக்க முடியாதுங்க') பிறிதொரு சிறப்பு அலுவலரான கோபாலகிருஷ்ண அனந்தரை கலெக்டர் கைகாட்ட,

"ஐயா நான் ஏதும் பேச முடியாது. தகவல்கள் ஏதும் தர எனக்கு உத்தரவில்லை" என்று ஒரேயடியாகத் தொலைபேசியில் மறுத்து விட்டார்.

"ஆனால் சிறப்பு அலுவலர் என்று உங்களைப் பின் எதற்கு அமர்த்தியிருக்கிறார்கள்?"

"பேட்டி கொடுக்க அல்ல."

"ஏற்பாடுகளில் முறைகேடுகள் நடைபெறுவதாகச் சொல்கிறார்களே?"

"அவதூறுகளைக் கேட்காதீர்கள். நம்பாதீர்கள். புகார் சொல்ல என்னை அணுகாதீர்கள். எல்லாம் அமைச்சர் அவர்கள் (எஸ்.டி. எஸ்.) மேற்பார்வையில் செவ்வனே நடைபெறுகின்றன. ஒரு ஊழல் இல்லை. ஒரு குறை இல்லை. நன்றி. வணக்கம்!"



• நமசிவாயம்



• சீனிவாச நாராயணசாமி

மாநாட்டில் என்னதான் செய்யப் போகிறார்கள் - தமிழ் வளர்ச்சிக்கு ஏதும் அடிகோலப் போகிறார்களா? என்று விவரங்கள் அறிய தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தரான டாக்டர் அவ்வை நடராஜனை அணுகினோம்.

முதலிலேயே பெரிசாக ஒரு கும்பிடு போட்டார்.

"தயவுசெய்து என்னை ஏதும் கேட்காதீர்கள். நான் பேட்டி ஏதும் தருவதற்கில்லை. எது குறித்தும் கருத்து சொல்லவோ, தகவல் தரவோ தயாராக இல்லை. அவ்வை நடராஜன் பேச மறுக்கிறார் என்று வேண்டுமானாலும் எழுதிக் கொள்ளுங்கள். என்ன விவரம் வேண்டுமானாலும், இதற்கென நியமிக்கப்பட்டுள்ள சிறப்பு அலுவலர்களைக் கேளுங்கள்!"

"ஆனால் ஐயா, அவர்கள் பேச மறுக்கிறார்களே?"

"அவர்களே பேச மறுக்கும் போது நான் எதற்குப் பேச வேண்டும்? தஞ்சாவூரில் மாநாடு நடக்கிறது. அதே தஞ்சாவூரில் தமிழ்ப் பல்கலைக் கழகமும் இருக்கிறது. மற்றபடி அதற்கும் எனக்கும் 'தனிப்பட்ட உறவு' ஏதுமில்லை" என்றார்.

சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த ஒரு மாநாட்டை நிர்வகிப்பவர்கள் இப்படிப் பேசப் பயந்து ஒதுங்குவது வெகு தமாஷாக இருக்கிறது. இதில் நடைபெறுவதாகச் சொல்லப்படும் சீர்கேடுகள் யாவும் ஒருவேளை உண்மையாக இருக்குமோ என்று சந்தேகம் வலுக்கிறது.

"அவர்கள் என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும். தமிழ் வளர்ச்சிக்கு உருப்படியாக ஏதும் திட்டங்கள் தந்தால் சரிதான்" என்கிறார் தஞ்சைராமமூர்த்தி.

நாம் சந்தித்த தஞ்சைவாசிகள் இம்மாநாட்டின் மூலம் எதிர்பார்ப்பவை இவைதான் :

1. தமிழ் மாநாட்டுப் பணிகளை அரசியல்வாதிகளே திட்டமிட்டுச் செய்யாமல், உள்ளூர் தமிழ் அறிஞர்களையும் கலந்தாலோசித்துச் செயல்படுத்த வேண்டும்.

2. மாநாட்டில் கட்டுரை வாசிக்க 100 டாலரும் அதற்கு மேலாகவும் முன்பணக் கட்டணம் வசூலிக்கிறார்கள். தமிழ் அத்தனை பணக்கார மொழி அல்ல. நல்ல கருத்துக்களுக்குத் தயங்காமல் இடம்தர வேண்டும்.

3. தமிழை - அதன் புராதனப் பெருமையை மட்டும் பேசிக் கொண்டிராமல் நவீனமானதாக - தொழில் படிப்புகளுக்கெல்லாம் பயன்படும்படியாக மாற்ற உபயோகமான வழிமுறைகள் வகுக்கப்பட வேண்டும்.

4. பிறமொழிகளுக்கு, தமிழின் படைப்பிலக்கியங்கள் செவ்வனே அறிமுகப்படுத்தப்பட வேண்டும்.

இதெல்லாம் நியாயமான கோரிக்கைகள் தானே? கேட்பதில் என்ன தவறு? செயல்படுத்துவதில் என்ன தயக்கம்?

'தமிழ் வளர்க்கும் தானைத் தலைவி'க்குப் புரிந்தால் நல்லது.

— நமது நிருபர்

படங்கள் : கேமரா திருஞானம்

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

## குண்டூசி

**48-வது ஆண்டு தீபாவளி மலர் 1994**

சிந்திக்க வைக்கும் ஆன்மீகக் கட்டுரைகள், கவிதைகள், நல் உபதேசக் கதைகள், மற்றும் பல சிறப்பு அம்சங்களுடன் சுமார் 200 பக்கங்களுடன், ஆர்ட் பேப்பரில் நாலு வண்ணங்களில் சுவாமிகளின் படங்கள் முதலியவைகள் மன அமைதியும் மகிழ்ச்சியும் அளிக்கும் தெய்வீகப் புனித மலராய் வெளிவருகிது.

**மலரின் விலை ரூ. 20/-**

*தபாலில் பெற விரும்புவோர் தபால் செலவு உள்பட ரூ. 22/- அனுப்பி அக்டோபர் 10-க்குள் பதிவு செய்து கொள்ளுமாறு வேண்டுகிறோம்.*

**விவரங்களுக்கு : நிர்வாகி குண்டூசி, சென்னை - 14. தொலைபேசி : 846434**

---

## இயற்கை மூலிகைப் பொடிகள் சிகிச்சை

சர்க்கரை, ஆஸ்த்மா, மூட்டுவலி, நரம்புத் தளர்ச்சி, ஞாபக சக்தி, அல்சர், காஸ்டிரிக், மூலம், B.P., இருதயக் கோளாறு, தோல் வியாதிகள், உடல் இளைக்க, கிட்னி, விஷக்கடிகள், முடி கறுத்து நீண்டு வளர, கர்ப்பப்பை கோளாறுகள், கண் தொல்லைகள் முதலியவற்றிலிருந்து பூரண குணம் பெற நம் முன்னோர்கள் சித்தர்கள் கூறியபடி நோய் வென்று வாழலாம். பரம்பரை சித்த வைத்தியர்களைக் கொண்டு தயாரிக்கப்பட்ட இயற்கை அபூர்வ மூலிகைப் பொடிகள் அனைத்தும் கிடைக்கும்.

மருத்துவரை நேரில் சந்திக்க மாலை 5 to 8.

**SAKTHI NATURE CURE RESEARCH AND SERVICE CENTRE**
1, YMCA BUILDING, ROYAPETTAH,
MADRAS -600 014. Ph: 831141
(Opp. Govt. Royapettah Hospital)

---

புத்தம் புதிய டிசைன்களில் உயர்ரக மதுரை சுங்குடி புடைவைகளுக்கு

## RAMACHANDRA SAREES,



(மதுரை சுங்குடி புடவைகளின் உலகம்)

37-B, Arya Gowder Road,
Postal Colony Bus Stop :
West Mambalam, Madras - 33.
Bus Route : 11R: 11J; 11E; 11D; 12G; 49J; 49:51; J13; 9A

*வழங்குவோர் : ராமசந்திரா சாரீஸ், 20 – B பழைய குயவர்பாளையம் ரோடு, மதுரை – 9*

எங்களிடம் இப்பொழுது தரமான வெங்கடகிரி மற்றும் பெங்கால் காட்டன் புடைவைகளும் கிடைக்கும்.

---

**KRISHNA ALSO AT GODOWN STREET**

## Sree Krishna

**CUT PIECE COLLECTION PVT. LTD.**

**Stockists For : SUITINGS, SHIRTINGS & SAREES & MATCHING BLOUSE BITS**

**39, GODOWN STREET,**
(OPP. FLOWER BAZAAR POLICE STATION)
MADRAS - 600 001.
TEL: OFF : 589596

AVAILABLE IN WHOLESALE AND RETAIL

பசங்களெல்லாம்
சண்டை போட்டுக்
கிறாங்க...புத்திமதி
சொல்லி சமாதானம்
சொல்லிட்டுவா...

திவாரி

உ.பி
காங்கிரஸ்
தலைமை
பதவி

ராவ்

நீயே என்
பேச்சை கேட்க
மாட்டேங்கிறே...
பசங்க எப்படி
மதிப்பாங்க!
பதவியும்
வேணாம்
ஒண்ணும்
வேணாம் போ!

பேஷ்! பேஷ்!
வைரவிழா
வாழ்த்துக்கள்!
உன் நற்பணி
தொடரட்டும்!

தினமணி

விடைபெற
வந்தேன்
தாயே!

வீரமணி

சென்று வா!
வென்று வா...



# கல்கி



1994
அக்டோபர் 9
பவ
புரட்டாசி 23
மலர் : 53
இதழ் : 10

தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## விகடன் பெற்ற வானளாவிய வெற்றி!

**எம்.**ஜி.ஆர். ஆட்சிக் காலத்தில் விகடன் ஆசிரியர் சிறைப் படுத்தப்பட்டதை யாருமே மறந்திருக்க முடியாது. இதையொட்டி விகடன் ஆசிரியர் எஸ். பாலசுப்பிரமணியன் தொடர்ந்த வழக்கில் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த தீர்ப்பு வெளியாகியிருக்கிறது. அது விகடனுக்கு மட்டும் வெற்றியல்ல; பத்திரிகை உலகுக்கே வெற்றி என்ப தால் பத்திரிகை சுதந்திரத்தைப் போற்றும் ஒவ்வொரு குடிமகனும் விகடனுக்கு நன்றி கூறக் கடமைப்பட்டவனாகிறான். அரசியல்வாதி களும் உணர்ச்சிவசப்படாமல் அமைதியாக யோசித்தால் இந்தத் தீர்ப்பிலிருந்து நிறையவே படிப்பினை பெறலாம்.

நடந்தது என்ன? சற்றே நினைவுகூர்வோம். விகடன் மேலட்டையில் மந்திரிகளையும் எம்.எல்.ஏக்களையும் கிண்டல் செய்து ஒரு ஜோக்கும் கார்ட்டூனும் பிரசுரமாயிற்று. இது சட்டமன்ற உரிமைகளைப் பாதிப்ப தாக அன்றைய எம். ஜி. ஆர். ஆட்சியில் சட்டமன்றத் தலைவராகச் செயல்பட்ட பி.எச். பாண்டியன் கருதி, விகடன் ஆசிரியருக்கு மூன்று மாதக் கடுங்காவல் தண்டனை விதித்தார். இது அதிர்ச்சியை மட்டு மின்றி மக்களிடம் அதிருப்தியையும் எதிர்ப்பையும் கூட ஏற்படுத்தியது. பின்னர் இத்தண்டனை குறைக்கப்பட்டு பாலன் சிறையிலிருந்து விடுதலையானார். இதையொட்டித்தான் பாலன் உயர்நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தார். தமக்குத் தண்டனை வழங்கப்பட்டது தவறு என்றும் நஷ்டஈடு தரப்பட வேண்டும் என்றும் கோரினார்.

வழக்கை ஆராய்ந்த நீதிபதிகள் அண்மையில் வெளியிட்டுள்ள தீர்ப் பின் சாரம் பின்வருமாறு: வானளாவிய அதிகாரம் தமக்கு இருப்பதாகக் கருதி யாருமே செயல்பட முடியாது. சட்டமன்றத் தலைவருக்கும் வேறு பலருக்கும் அதிகாரங்கள் வழங்கப்பட்டிருந்தபோதிலும் அவற் றைத் துஷ்பிரயோகம் செய்யக் கூடாது. அதிகாரங்களை அமுல்படுத் தும்போது அதற்குரிய வரம்புகளும் விதிமுறைகளும் உள்ளதை மறவா மல் அவற்றை அனுசரித்தே பயன்படுத்த வேண்டும். எப்பேர்ப்பட்ட அதிகாரியானாலும் சரி, சட்டமன்றத் தலைவரேயானாலும் சரி, அவர் சரியான முறையில் அதிகாரப் பிரயோகம் செய்கிறாரா அல்லது துஷ் பிரயோகம் செய்கிறாரா என்பதை ஆராயும் தகுதியும் உரிமையும் கடமை யும் நீதிமன்றங்களுக்கு உண்டு. எப்பேர்ப்பட்ட குற்றவாளியானாலும் சரி, அவர் தரப்பு வாதத்தைக் கேட்காமல் தண்டனை விதிப்பது என்பது அடிப்படை உரிமைகளை மறுப்பதாகும் என்பதோடு யதேச்சாதிகாரமும் கூட. சட்டத்துக்கும் மரபுகளுக்கும் முற்றிலும் முரணானது.

குறிப்பிட்ட இந்தச் சம்பவத்தில் சட்டமன்ற உரிமைகள் கமிட்டி என்பதாக உள்ளது. அவர்களிடம்பிரச்னையைக் கொண்டு போய் கருத்து கேட்டறியப்பட்டிருக்க வேண்டும். அதுவும் தவிர விகடன் ஆசிரியரின் வாதத்தையும் வரவேற்றிருக்க வேண்டும். இருதரப்பு வாதங்களையும் எடைபோட்டுப் பார்த்துப் பின்னரே ஒரு முடிவுக்கு வந்திருக்க வேண் டும். இவ்வாறு அன்றைய சபாநாயகர் நடந்து கொள்ளாதது முறையற்றது. 'அன்றைய ஆட்சி முடிந்து போயிற்று; இன்று நடப்பது வேறு ஆட்சி' என்று வாதாட முடியாது. ஆட்சி மாறினாலும் அரசு தொடர்கிறது. எனவே இன்றைய ஆட்சி அரசு இதற்குப் பரிகாரம் காண வேண்டும்.

மாண்பமை நீதிபதிகள் விகடனில் வெளியான ஜோக் தரமானது தானா, சட்டமன்ற உறுப்பினர்களின் உரிமைகளைப் பாதிக்கிறதா என்ற பிரச்னைக்குப் போகவில்லை. அது ஒருவேளை பிரசுரமாகக் கூடாத ஜோக்காகவும் இருக்கலாம். ஆனாலும் அதன் மீது நடவடிக்கை எடுப் பது எனில் அதை முறையாகச் செய்ய வேண்டும் என்று சுட்டிக்காட்டி யுள்ளனர்.

விகடன் ஆசிரியருக்கு நஷ்டஈட்டுத் தொகை அளிப்பது என்பது முக்கியமல்ல. ஒரு மாபெரும் முறைகேடு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. ஆசிரிய ருக்கு இழைக்கப்பட்ட மிகப் பெரிய அநீதி துடைக்கப்பட்டுள்ளது என்பதே முக்கியம். எனவே ஓர் அடையாளமாகத்தான் ரூ. 1000 அரசு நஷ்டஈடு தரவேண்டும் என்று தீர்ப்பு வழங்கியுள்ளது உயர் நீதிமன்றம்.

அரசு தாமதமின்றிச் செயல்பட்டு நஷ்டஈடு காசோலையை விகடன் ஆசிரியருக்கு அனுப்பிவைக்கட்டும். அதை விகடன் ஆசிரியர் காசாக் காமல், எல்லோருக்கும் எடுத்துக்காட்டாக ஃபிரேம் போட்டு மாட்டி வைத்து காட்சிப் பொருளாக்கட்டும்.




# வீணாகிறதா மாணவர் சக்தி?

கல்லூரியின் மாணவர் பேரவைக்கான தேர்தல் முடிந்த சில நாட்கள் கழித்து, எதிர்பாராமல் ஒருநாள் கல்லூரி விடுமுறை. மாணவர் தலைவர் பிரபு, "நண்பர்களே, எதிர்பாராமல் கிடைத்த இந்த விடுமுறையை ஊர் சுற்றி வீணாக்காமல், உருப்படியாய் செலவழிப்போம். கல்லூரித் தேர்தல் சமயம் போஸ்டர் ஒட்டி, பெயிண்ட் அடித்து, காலேஜ் சுவர்களையெல்லாம் நாசமாக்கினோமல்லவா? இன்று எல்லோரும் சேர்ந்து அதையெல்லாம் சுத்தம் செய்வோம்" என்கிறார். துப்புரவுப் பணி தொடங்குகிறது.

அந்த யூனியன் தலைவர் பிரபு - பிரபுதேவாதான். இங்கே விவரித்தது, அண்மையில் வெளியான 'காதலன்' படக் காட்சிகளுள் ஒன்று.

இதே படத்தின் கிளைமேக்ஸில் வெடிகுண்டு வைக்கப்பட்ட மருத்துவமனை ஒன்றிலிருந்து, அத்தனை நோயாளிகளையும் மனிதாபிமானத்துடன் அப்புறப்படுத்தும் பணியைச் செய்வதும் அனைத்துக் கல்லூரி மாணவர்கள்தாம்!

இப்படி, மாணவர் சக்தியை உருப்படியான வகைகளில் பயன்படுத்தும் காட்சிகள் ஒரு சினிமாவில் வந்திருப்பது சந்தோஷமான, வியப்பான விஷயமெனினும் நிஜத்தில் எத்தனை தூரம் சாத்தியம்?

"அரசியல் கட்சிகள் எந்தெந்தக் கல்லூரிக்குள் மூக்கை நுழைக்கிறார்களோ, அங்கே மட்டும்தான் தகராறு. கலாட்டா. ஸ்டிரைக் எல்லாம். மற்றபடி மாணவர்கள் தாம் உண்டு, தம் படிப்பு உண்டு என்றுதான் இருக்கிறார்கள்" என்கிறார் ஒரு கல்லூரி மாணவர்.

"அரசியல் கட்சிகளுக்கு, கல்லூரிகள் மீது ஏன் தனி அக்கறை?"

"கட்சி உறுப்பினராய் இருக்கிற மாணவர்கள், கட்சி அனுதாபிகள் இவர்களையெல்லாம் கட்சி மாணவர் அணியில் ஒன்று திரட்டுவது மூலம் கட்சியின் அடித்தளம் பலப்படுகிறது. இளம் ரத்தம் ஏற ஏற பலம்தானே?" என்கிறார் முன்னாள் அமைச்சர் துரைமுருகன். இவர் தி.மு.க.வின் மாணவர் அணித் தலைவராக இருந்தவர்.

"மாநிலம் முழுவதிலும் இருக்கும் அரசுக் கல்லூரிகள் அனைத்துக்குமாய் ஒரே நாள் குறிக்கப்பட்டு மாணவர் பேரவைத் தேர்தல் நடக்கிறது. அதில் ஒரு அரசியல் கட்சியின் அங்கீகாரம் பெற்ற வேட்பாளராகப் போட்டியிடுவதையே பெரும்பாலான மாணவர்கள் விரும்புகிறார்கள்" என்கிறார் அ.தி.மு.க. மாணவர் அணித் தலைவரான ஜசரி கணேஷ்.

மாணவர்கள் தம் கல்லூரி யூனியனுக்கான தேர்தலில் போட்டியிட, அரசியல் சாயம் பூசிக் கொள்வதன் அவசியம் என்ன? மாணவர் சக்தி, இதனால் ஒரு அரசியல் சக்தியாக உருப்பெறுவது நல்லதுதானா? இந்தக் கேள்விக்கு விடைகளைத்தேடிப் புறப்பட்ட



• ஐசரி கணேஷ்



• துரைமுருகன்



• சிவசங்கரி



• அசோக்

போது பலதரப்பட்ட செய்திகள் நமக்குக் கிடைத்தன.

"நம் நாட்டில் எதில்தான் அரசியல் நுழையவில்லை? ஒரு தொழிற்சாலையில் பணிபுரிபவர்களுக்கு ஒரு தொழிற்சங்கம் போதாதா? எதற்கு ஏராள அரசியல் கட்சிகளின் பெயரால் யூனியன்கள்? அது போலத்தான் இது!" என்கிறார் துரைமுருகன்.

சென்னை புதுக் கல்லூரி மாணவர் பேரவைத் தலைவரான ஏ.அசோக் (மூன்றாம் ஆண்டு, பி.ஏ.) கைச் சந்தித்த போது,

"நான் ஒரு பிரபல அரசியல்வாதியின் (அன்பரசு, காங்.) மகன்தான். ஆனால் எங்கள் யூனியன் தேர்தலில் எந்தக் கட்சியின் சார்பிலும் நான் நிற்கவில்லை. மாணவர்களின் ஒட்டுமொத்த ஆதரவே என் வெற்றிக்குக் காரணம்" என்று கூறும் இவர், "கல்லூரிகளில் அரசியல் நுழைவது மிகவும் தவறு" என்கிறார்.

"நீங்கள் கல்லூரித் தேர்தலில் அரசியல் நுழைவதை விரும்பாவிடிலும் ஒரு அரசியல்வாதியின் மகன் என்கிற இமேஜ் ஒன்றே போதுமே?"

"இதை நான் மறுக்கிறேன். தேர்தல் சமயத்தில் ஒரு போஸ்டரில் கூட காங்கிரஸ் வண்ணமோ, வேறு கட்சிகளின் வண்ணமோ இல்லை. இங்கே கல்லூரியும் அதனை அனுமதிப்பதில்லை. எனக்கு அரசியல் ஆர்வம் உண்டு. அது தனிப்பட்ட விஷயம். ஆனால் நான் ஒரு கல்லூரி மாணவன் என்கிற வகையில் எந்த அரசியல் சாயமும் இன்றுவரை எனக்குக் கிடையாது."

அசோக் இப்படிச் சொன்னாலும் இதர கல்லூரிகளில் அரசியல் மூக்கு நுழைப்பு அமோகமாகத்தான் இருக்கிறது.

பெயர் சொல்ல விரும்பாத ஒரு முன்னாள் பச்சையப்பன் கல்லூரி மாணவர் தலைவர் சொன்னார் :

"எங்கள் கல்லூரிக்கு எப்போதுமே தி.மு.க. சப்போர்ட் உண்டு. கட்சி சார்பு வேண்டாம் என்று சில சமயங்களில்



• காதலன்: வியப்பான விஷயம்

தோன்றினாலும் தேர்தல் சமயங்களில் போஸ்டர் செலவு, பேனர், பிட் நோட்டீஸ் இதர செலவுகளுக்கு கட்சி உதவி புரிவதை மறுப்பதற்கில்லை. அவர்களும் சும்மா செய்வதில்லை. கட்சிக் கூட்டங்களுக்கு 'கும்பல்' சப்ளை செய்வது, கலாட்டாக்களின் போது கட்சிக்குத் தோள் கொடுப்பது போன்றவற்றிற்கு மாணவர் சப்போர்ட் அவர்களுக்குத் தேவையாயிருக்கிறது."

இதனாலெல்லாம் படிப்பு பாதிக்கப்படுமே என்றால், "படிப்பை ஒரு பொருட்டாகக் கருதாதவர்கள்தானே இப்படி யூனியன் தேர்தல்களில் நிற்கிறார்கள்?" என்று கேட்கிறார் ஒரு மாணவர்.

"யூனியன் தேர்தல்களில் நிற்கும் மாணவர்கள் பெரும்பாலும் அரசியல் வாதிகளின் மகன்களாகவோ, அல்லது அரசியல் பின்னணியுள்ள குடும்பத்திலிருந்து வந்தவர்களாகவோதான் இருக்கிறார்கள். அவர்களுக்குத் தேர்தல் ஒரு பொழுது போக்கு. ஒரு பப்ளிசிடி. தவிர, கல்லூரி மாணவர் முன்னேற்றத்திற்காக யாரும் எப்போதும் கவலைப்படுவதில்லை" என்கிறார் ஒரு கல்லூரி முதல்வர்.

"மாணவர் சமூகத்தை ஒட்டுமொத்தமாய் பாதிக்கும் பிரச்னை இன்று ஏதும் இல்லாததாலேயே அவர்கள் ஏதேனும் செய்ய விரும்பி, தவறான பாதைக்கு திசைதிருப்பி விடப்படுகிறார்கள். இன்று பஸ்கள் ஓடாது. தவிர, மாணவர்களை ஆட்டிப் படைக்கும் அரசியல் கட்சிகளுள் - பெரும்பாலானவை - தம் கொள்கைகளை மறந்து, குறுகிய நோக்கம் கொண்டு, சுயலாபத்துக்காகச் செயல்பட ஆரம்பித்து விட்டன. மாணவர் சக்தி வீணாவதற்கு இதுவும் ஒரு காரணம்" என்கிறார் துரைமுருகன்.

**மா**ணவிகள் கல்லூரிகளில் இந்தப் பிரச்னையே இல்லை. ஏனெனில் அங்கு யூனியனும் இல்லை. அரசியலும் இல்லை!

"எங்கள் கல்லூரியில் ஒரு 'வெல்ஃபேர் கமிட்டி' மட்டுமே உண்டு. முற்றிலும் மாணவிகள் நலன் சார்ந்தே இயங்கும் அமைப்பு அது!" என்கிறார் வைஷ்ணவா கல்லூரி மாணவி ஒருவர். ஏனைய பெண்கள் கல்லூரியிலும் இதுதான் நிலைமை. (அதுவரை சந்தோஷம்!)

'**மா**ணவர் சக்தி வீணாகிறதா?' என்ற கேள்விக்கு, சிவசங்கரி சொல்கிறார்:

"இன்றைய மாணவர்கள் தங்கள் அறிவை, திறமையை அபிவிருத்தி செய்து கொள்ளத்தான் எத்தனை வசதிகள்? இந்த Exposure அவர்களை புத்திசாலிகளாய் ஆக்கியுள்ளதென்பதை மறுப்பதற்கில்லை.

"ஆனால் இதே விஞ்ஞான வசதிகள் அவர்கள் கவனத்தைத் திசை திருப்புவதாகவும் தவறான பாதைகளில் அழைத்துச் செல்வதாகவும் பல சந்தர்ப்பங்களில் அமைந்து விடுகிறது. எல்லா மாணவர்களுமே நீரை நீக்கி பாலை மட்டும் பருகும் ஆற்றல் படைத்தவர்களாக இருப்பதில்லை. இன்றைய இளைஞர்கள் பல வகையிலும் 'கெட்டு'ப் போவது விசனப்பட வைக்கிறது. இதைத் தவிர்க்க கல்வி, சுகாதாரம் போன்ற துறைகளில் அவர்களை சமுதாயப் பணி ஆற்ற வைப்பதே சிறந்த வழி" என்கிறார் சிவசங்கரி.

"மாணவர் சக்தியை ஆக்கபூர்வமாய் பயன்படுத்த வேண்டுமானால் அதற்கு தடாலடியான அதிகாரத் தொனி பயனளிக்காது. அதிகாரம் எதிர்மறையான விளைவுகளையே ஏற்படுத்தும்" என்று எச்சரிக்கிறார் துரைமுருகன்.

"சிநேகமாய்ப் பேசி, அவர்களுக்கும் நாட்டிலுள்ள பல்வேறு பிரச்னைகளின் ஆழத்தைப் புரியவைத்து, அவர்களுக்குள்ள பொறுப்பை உணர்த்தி, ஒத்துழைப்பைக் கோர வேண்டும். பெற்றோரும் ஆசிரியரும் தலைவர்களும் சிறந்த முன் உதாரணங்களாய் விளங்கி ஓர் எழுச்சியை ஏற்படுத்துவதுதான் சரியான அணுகுமுறை" என்று முடித்தார் சிவசங்கரி.

— நமது நிருபர்கள்

# செயலில் வேண்டும் கவனம்!





புத்திசாலிகள்...

நாளைய வேலையை இன்றைக்கே செய்கிறார்கள்.

சராசரிகள் -

இன்றைய வேலையை இன்றைக்குச் செய்கிறார்கள்.

மூடர்கள் -

நேற்றைய வேலையை இன்றைக்குச் செய்கிறார்கள்.

ஆனால் இந்தியரில் பலர்... சென்ற ஜென்மத்து வேலையை இந்த ஜென்மத்தில் செய்து கொண்டிருக்கிறார்கள்!

இத்தனைக்கும் இந்த இந்தியனின் பாரம்பரியம் எப்படிப்பட்டது? ஜனன காலத்திலேயே மரண காலத்தைப் பற்றி யோசித்து வாழ்க்கையை முன்கூட்டி வகுத்துக் கொள்ளும் உத்வேகத்துடன் 'அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன்' என்ற ஆழ்வாரின் ஆன்ம வாரிசுகள் நாம்.

'இப் பிறவி தப்பிடில் எப்பிறவி வாய்க்குமோ? ஏது வருமோ' என்ற (தாயுமானவர்) முன்ஜாக்கிரதை முனிவர்களின் வம்சாவழிகள் நாம். நாம் ஏன் இப்படி ஆனோம்?

அந்நியப் படையெடுப்புகள் நம்மைச் சுரண்டிய போது நமது நம்பிக்கையும் வாழ்க்கை முறையும் சுரண்டப்பட்டு விட்டனவா?

எது எப்படியோ... போனது போகட்டும்.. கீதை, ஒருவனை இப்பிறவிக்கும் வரும் பிறவிக்கும் (வந்தால்) தயார் செய்கிறது! ஆம்... யோக வாழ்வில், அப்பியாசம் (பயிற்சி... திரும்பத் திரும்பப் பயிற்சி) கீதையில் வலியுறுத்தப்படுகிறது.

பயிற்சியில் தவறு நேர்ந்தாலும், பாதியில் சறுக்கி விழுந்தாலும், மரணம் அதற்குள் மனிதனைத் தழுவினாலும் கவலை வேண்டாம். அடுத்த பிறவியின் ஆரம்ப கட்டத்திலேயே இந்த அப்பியாசம் கைகொடுக்கும் என்கிறான் கீதாசார்யன்.

"ஒருமையுள் தாம் கற்ற கல்வி எழுமையும் ஏமாப்புடைத்து" என்கிறது காலத்தால் கீதையை முந்திய குறள். எனவே, யோகம் பயில்வது வாழ்க்கையை விளக்கும் முதல் வழி.

யோகம் பயிலுவோர் விழிகளை மூடியும் மூடாமலும் நாசியைப் பார்த்தபடி இருக்கச் சொல்கிறது கீதை. ஏன்? விழிகளை முழுவதும் மூடி விட்டால், தூக்கம் வந்து விடும்.

**சுகிசிவம்**

முழுவதும் திறந்து வைத்தால் உலக விஷயங்களில் ஈடுபட்டு விடுவோம். மூடியும் மூடாமலும் இருந்தால் விழிப்பும் அமைதியும் கைகூடும். நாள்தோறும் இப்படி, காலையும் மாலையும் தியானம் செய்வது அவசியம் என்கிறார் ஆசார்ய வினோபாபாவே.

ஆனால் ஒன்று. இப்படி யோகம் பயில்வது வலது மூக்கையும் இடது மூக்கையும் மாறி மாறிப் பிடித்துக் கொண்டே இருக்கத்தானா? இல்லை... இல்லை.. இல்லவே இல்லை. உடலை வலுப்படுத்தி, காற்றை நெறிப்படுத்தி, மனத்தை வசமாக்கிக் கொண்டால் அற்புதப் பணிகள் ஆயிரம் செய்யலாம்! வசமான மனது கடிவாளம் இட்ட முரட்டுக் குதிரை போல. இந்த யோகக் குதிரைகளின் பலமும் பணியும் அபாரமானவை. யோகம் கைவரப் பெற்றவர் எண்ணங்கள் நேரானவை. செயல்கள் சீரானவை. மனது சீரான மனிதர்களின் செயல்கள் மகத்தானவை.

மனது சீரான மனிதர்கள் ஒருபோதும் செயலை விடுவதே இல்லை. செயலின் பயனை மட்டுமே துறக்கிறார்கள். ஒரு செயலின் பயனைத் துறப்பவன் கர்மயோகி. செயலையே துறப்பவன் தேசத் துரோகி! செயலின் பயனைத் துறப்பவர்கள் செயலை முழுமையாகச் செய்வதால் செயற்கரிய செய்கிறார்கள்.

ஆனால், செயலைப் பற்றிய அக்கறை நமக்கு இருக்கிறதா? செயலின் பயனாகிய பணம் சம்பாதித்தல் என்பது மட்டும் சமூகத்தின் எல்லாப் பக்கங்களிலும் ஜாம் ஜாம் என்று ஜகஜோதியாக நடக்கிறது. இது தவறல்லவா?

பத்து மணிக்கு ஓர் இடத்தில் இருந்து அரசு போக்குவரத்துக் கழகப் பேருந்து புறப்பட வேண்டும். புறப்படவில்லை. ஏன்? 10.05க்கு ஒரு தனியார் பேருந்து அதே வழித் தடத்தில் உள்ளது! அந்த முதலாளி அரசுத் தொழிலாளரைத் தக்கபடி 'கவனித்து'க் கொண்டால் அரசு பஸ் ஓடாது. ஊழியர் நேர்மையானவர் என்றால் நேரக் கண்காணிப்பாளர் கவனிக்கப்படுவார். அவரும் மசியவில்லையா? மேலிடம் 'கவனிக்கப்படும்'. மேலிடம், வேலை வாங்குவதற்குப் பதிலாக, ஊழியரை வேலை பார்க்காதே என்று எச்சரிக்கும்... பணம்... பணம்... பணம். செயலின் பயன் பெரிதாகி... செயல்கள் செத்துப் போகின்றன.

எல்லோருக்கும் சம்பளத்திலும் சன்மானத்திலும் இருக்கும் அதே அளவு ஆர்வம், பணியிலும் செயலிலும் இருந்திருந்தால் இன்றைக்கு இந்தியா இப்படி இருக்குமா? உலக




— சீர்காழி வி. ரேவதி

நாடுகளின் தலைமையகமாக அல்லவா இருந் திருக்கும்! வாருங்கள்... செயலில் அக்கறை காட்டுவோம். செயலின் பயனைப் பற்றிய கவலையை ஒதுக்கி வைப்போம்.

ஒரு வித்வானைப் பாட ஏற்பாடு செய்தார்கள். சன்மானம் ஆயிரம் ரூபாய் என்றார். ஒப்புக் கொண்டனர். விழா நாளில் வித்வான் 'ஆ - ரம்பம்' செய்தார். ஊனமாகிப் போன ராக தேவதைகள் தியாகய்யரையும் தீட்சிதரையும் கட்டிக் கொண்டு கதறி அழுதன. வித்வான் பாடப் பாட, போதும் போதும் என்று சபா செயலாளர் அபிநயம் பிடித்து ஆடிப் பார்த்தார். வித்வான் ஆக்ரோஷமாகப் பாடினார். ஸ்வரத்துக்கே ஜுரம் வந்து விட்டது. மைக்கைப் பிடித்து பாட்டை நிறுத்தும்படி மன்றாடிக் கேட்டார் செயலாளர்.

'ஆயிரம் ரூபாய் ரேட் பேசியிருக்கே...' என்று இழுத்தார் வித்வான். 'கேட்டபடி ஆயிரம் தருகிறேன், நிறுத்துங்கள்' என்றார் செயலாளர். வித்வானோ படு போர்வழி. "பாடத்தான் ஆயிரம் ரூபாய். பாடாமல் இருக்க இரண்டாயிரம் வேண்டும்" என்றார்!

இந்தச் சீரழிவு ஏன்? செயலில் அக்கறை இல்லை. செயலின் பயனில் ஈடுபாடு.

இன்றைக்கும் இந்திய வீடுகளில் - உழைக்க வேண்டிய அவசியமே இல்லாத முதியவர்கள் சந்தோஷமாக உழைக்கிறார்கள். சமூகப் பணிகளில் லாப நோக்கின்றி பாடுபடுகிறார்கள். கடவுளை வணங்குவதற்காகவே வணங்கும் பக்தனுக்கும் - கடவுளை வணங்குவதன் மூலம் வேறொரு வேண்டுதலை நிறைவேற்றிக் கொள்ளும் பக்தனுக்கும் வேறுபாடு உண்டு.

அதுபோல செயலுக்காகவே, செயலை நேசிக்கும் கர்மயோகிகள் இன்னும் இருப்பதால்தான் இந்தியா சுவாசிக்கிறது. எந்தவிதமான தொழிலும் புரிந்தாக வேண்டிய கட்டாயம் இல்லாத இறைவன் தான் தொழிற்படுவதை அர்ச்சுனனுக்கு விளக்கி இருக்கிறார்.

நண்பர்களே, செயலில் நிறைவு வேண்டும். செயலின் பயனில் அல்ல!

(தொடரும்)

**க**தை : தேசத் துரோகியை எஸ்.பி. வீரமணி பிடிக்கிறார்; கொல்கிறார்.

எப்படி?

உங்களுக்குத் தெரிந்த ஜெய்சங்கர் படங்களையெல்லாம் ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். அம்புடுதேன்!

ஜெமினிகணேசன் ஒரு காட்சியில் வருகிறார். பளிச்செனப் பதிகிறார்.

ஜலக்கிரீடை இல்லாமல் ஒரு படம் யுவராணிக்கு. நடிப்புக்கு வாய்ப்பில்லை. கொஞ்சம் ரிலீஃப் தர, அப்பப்போ எட்டிப் பார்க்கிறார்.

டைரக்டரிடம் சில கேள்விகள் கேட்க ஆசை :

1. கொலையாளியை நேருக்கு நேர் பார்த்தவுடன், பிடிக்காமல், அது என்ன ஓடிப் பிடித்து விளையாட்டு?

2. இடைவேளையை ஒரு 'பெப்'போடு நிறுத்த, அடுத்த சீனிலேயே அந்த 'பெப்'பை காற்றில் பறக்க விடுவது ஏன்?

3. அதற்கு மேல் முடிவு. ஒண்டிக்கு ஒண்டி சண்டை. இது என்ன காத்தாடி தகராறா?

யாராவது படத்திற்காகக் கஷ்டப்பட்டிருக்கிறார்களா என்றால், கண்ணுக்குப்படுவது வில்லன்தான். கஷ்டப்பட்டுச் சிரிக்கிறார். மற்றவர்கள்?

கேமராவைச் சொல்ல வேண்டும். படம் பார்ப்பவர்கள் கையோடு டார்ச் லைட் எடுத்துச் செல்லவும்.



# வீரமணி

## கரம் மசாலா

♦ டைரக்டர் விகவிடமிருந்து திடீரென அவருக்கு அழைப்பு வந்தது. 'உனக்கு ஏற்றதொரு ரோல். வந்து நடி' என்ற விகவின் கட்டளையை ஏற்றுக் கொண்டாலும் என்ன வேஷம் என்பது அவருக்கு சஸ்பென்ஸ். காஸ்டியூமர் வந்து அளவெடுத்த போதும் எதற்கு இந்த மாதிரியெல்லாம் அளவுகள் எடுக்கிறார் என்று திகைப்பு. விஷயத்தை உடைத்தார் விக. கம்பீரமான அந்த மனிதருக்குப் படத்தில் பெண் வேடம். இப்போது புகைப்படத்தைப் பாருங்கள்! யாரென்று கண்டு பிடித்து இருப்பீர்களே! ம.வி. செய்தி வாசிப்பாளரான வரதராஜன்தான்!

• செல்வநாயகம்



♦ தமிழக அரசின் தலைமைச் செயலகம் இயங்கி வரும் புனிதஜார்ஜ் கோட்டைக்கு ஏன் அப்பெயர் வைக்கப்பட்டது? கோட்டை வளாகம் ஆங்கிலேய கிழக்கிந்திய கம்பெனியால் கட்டி முடிக்கப்பட்ட தினமான 23 ஏப்ரல் (1640), ஆங்கிலேயருக்குப் புனித ஜார்ஜ் தினம். எனவேதான் கோட்டைக்கும் புனித ஜார்ஜ் கோட்டை என்று பெயர். (ஜெ. காலத்தில் பு.ஜா. கோட்டையை பு.ஜெ. கோட்டை என்று பெயர் மாற்றம் செய்யாமல் இருந்தால் சரி!)

♦ பிக் பாஸ், டைரக்டர், எஃப்.ஐ.ஆர். லேபர் லீடர், லா அண்டு ஆர்டர், மாஸ்டர்



**அ**டிதடியெல்லாம் கை கொடுக்காது போகவே, மீண்டும் சென்டிமென்டில் தஞ்சம் புகுந்திருக்கிறார் விஜய்காந்த்.

தம்பிக்காகவே அண்ணன் வாழ்கிறான். முரளி தம்பி. தன் கல்யாணத்திற்குப் பின்தான் அண்ணன் கல்யாணம் என்பதால், ரஞ்சிதாவை வெட்டரால் துரத்துகிறார். அதில் மோதல்; அண்ணன் சப்போர்ட், கடைசியில் 'அண்ணி' உயிர் விட மாங்கல்யம் தந்துனாவே.

ஆர். சுந்தர்ராஜன் டைரக்டராக




மறுபடி நுழைகிறார். பெண்களைப் பிழியப் பிழிய அழ வைக்கப் போதுமான காட்சிகளோடு காமெடியும் கைவருகிறது.

விஜய்காந்த், முரளி நடிப்பை விட அதிகமாக மனத்தில் நிற்பவர் 'தத்ரூபம்' - ரேவதிக்கு மறுபெயர்!

ரஞ்சிதா - நடிக்கலாமே?

பாட்டு, சண்டையிலெல்லாம நல்ல கவனம் செலுத்தியிருக்கிறார்கள். சின்ன வயது ரேவதி பாடும் பாட்டு ஓஹோ!

சிலருக்கு சென்டிமென்ட் அலர்ஜி உண்டு. அவர்கள் சமர்த்தாய் டீவி. பார்க்கவும். மற்றவர்கள் ஒரு பாட்டம் உணர்ச்சிப் பிழம்பாய் மூக்கு சிந்தி வர விரையுங்கள் தியேட்டருக்கு! உங்களுக்கான ஸ்பெஷல் தயாரிப்பே எ.ஆ.ம.

- துளசி



பிளான், தி ஸிடி, லேகஸ் ஒன்லி, க்விட் இந்தியா, கேம்பஸ் ஸ்டோரி, ஸிடி மேன்.... சத்தியமாய் இவை எல்லாம் திராவிட மொழிகளில் எடுக்கப்படுவதற்காக சேம்பரில் பதிவு செய்யப்பட்டிருக்கும் சினிமா தலைப்புகள். How is this?

• இன்னொரு செயற்கைக்கோள் தொலைக்காட்சி வரப் போகிறது. பெயர் : உலகத் தமிழ் தொலைக்காட்சி. இருபத்தி நான்கு மணி நேரமும் தொடர்ச்சியாய் தமிழ் நிகழ்ச்சிகள். தொடங்கவிருப்பவர் ஜெர்மனியில் வாழும் யாழ்ப்பாணத் தமிழரான செல்வநாயகம். சென்னை தொழிலதிபர் பாலன், கங்கை அமரன் இவர்கள் உதவியுடன் சென்னையில் நிகழ்ச்சிகள் தயாரிக்கப்படுகின்றன. பொழுது போக்கு அம்சங்களுக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுக்காமல், அறிவுபூர்வமான விஷயங்களையும் சுவையாய் சொல்லப் போகிறார்களாம். தரக்கட்டுப்பாட்டு அதிகாரியாகப் பொறுப்பேற்றுள்ளவர் : சன் டீ.வி. ''ஜோடிப் பொருத்தம்'' புகழ் ரெகோ.

- மௌலி

• வரதராஜன்

# மூன்று காட்சிகள்

அப்பாவை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்தேன். எலும்பும் தோலுமாய்க் கிடந்தார். உலகத்துக் கெட்ட வியாதிகள் எல்லாம் உறவு கொண்டாடி மொய்த்து இடுப்பு வரை மென்று விழுங்கி, மெள்ள மெள்ள மேலேறிக் கொண்டிருப்பது தெரிந்தது. அவரால் என் முகத்தை நேருக்கு நேர் பார்க்க முடியவில்லை. எப்படியிருந்த உடம்பு! என்னென்ன ஆட்டமெல்லாம் ஆடித் தீர்த்த உடம்பு!

காலையில் ஊறவைத்த பாதம் பருப்பு, கர்லா சுற்றுதல், ஒரு சூட்டு வெந்நீர் - அதன் பதம் கெட்டால் எத்தனை ஆர்ப்பாட்டம்! - பரோட்டா - குருமா. பால் - முட்டை - இப்படி சாண்டோ கணக்காய்க் கரணை கரணையான தேகம். அந்த உடம்புக்காக... அந்த உடம்புக்காக... வேண்டாம், தலைகுனிய வேண்டிய அந்தத் திசையில் ஏன் மறுபடி மறுபடி என் நினைப்பு திரும்புகிறது?

குழந்தை அமுதா, என் மனைவியின் மோவாயைத் தன் பக்கம் திருப்பி, "ஏம்மா அழுறாங்க? தாத்தா, மேலேருந்து விழுந்துட்டாரா?" என்றாள்.

அவர் கண்களிலிருந்து பொலபொலவென்று கண்ணீர் வழிந்தது. சர்க்கரை வியாதிக்காரர்கள் ஒன்றுமில்லாததற்கெல்லாம் முசுமுசுவென்று அழுவது உண்டு. இது அந்த ரகம் அல்ல. அவர் சொன்னார், "ஆமாம்மா. வாழ்க்கையிலேயே வழுக்கி விழுந்துட்டேன். எந்திரிக்க முடியாமே பலமா அடிபட்டுடுது. விழுந்துட்டேம்மா, விழுந்துட்டேன்."

அதை அவர் குழந்தைக்குச் சொல்லவில்லை. உலகத்துக்கே சொல்லி மன்னிப்புக் கோருகிற மாதிரி இருந்தது. அவர் வழுக்கிய வழுக்கல்... அது எப்படியெல்லாம் திசை தப்பிப் பாய்ந்து தந்தைக்கும் மகனுக்கும் உள்ள பாசத்தைக் கூட அறுத்தெறிந்து விட்டது!

அடுத்தடுத்து மூன்று காட்சிகள் என் நினைவைக் கீறின.

## முதல் காட்சி

இப்போது கூடச் செய்திப் படங்களில் கோனாரக் காஜுராஹோ சிற்பங்களைப் பார்க்கிற போது எனக்கு அந்த ஜானகியின் நினைப்புத்தான் வரும். அப்படிப்பட்ட பெண்ணை அதற்குப் பிறகு நான் நேருக்கு நேர் பார்த்ததே இல்லை. அப்போதுதான் என்னைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்திருந்த சமயம்.

ஜானகிக்கு என்கிட்டே உயிர். என்னைக் கண்டால் அப்படியே நெஞ்சோடு அணைத்துக் கொண்டு விடுவாள். அந்த மெத்தென்ற உணர்வு, இதமான சூடு எனக்கு ரொம்பப் பிடிக்கும். ஏன், யாருக்குமே பிடிக்கும் என்று தோன்றும்.

அவள் இரண்டு எருமை மாடு வைத்துப் பால் கறந்து வீடு வீடாய் ஊற்றுவாள். எங்கள் வீட்டுக்கும் அவள்தான் பால்காரி. எனக்காகக் கட்டித் தயிர், பாலாடை எல்லாம் வைத்துக் கொண்டு மடியில் என்னைத் தூக்கி வைத்



துக் கொண்டு ஊட்டுவாள்.

"சுந்தரம், எனக்கு உன்னை மாதிரியே ஒரு பிள்ளை பிறந்தா எவ்வளவு நல்லா இருக்கும். உன்னை மாதிரியே..." என்று என்னைக் கட்டிப் பிடித்துக் கொண்டு சொல்வாள்.

அந்தப் பிடி இறுகும் போது என் மூச்சுத் திணறிப் போகும். "விடு ஜானகி, எனக்கு ஸ்கூலுக்கு நேரமாச்சு. நான் போறேன்'' என்று சொல்லி ஓடி வந்து விடுவேன்.

என் அம்மா ஒருநாள், "சுந்தரம், அந்த ஜானகி வீட்டுக்குப் போகாதே இனிமேல்" என்றார்கள்.

"ஏம்மா?"

''அவள்... அவள்... வந்து... ரொம்ப கெட்டவள்."

கெட்டவளா! என்கிட்டே எவ்வளவு ஆசையாய் இருக்கிறாள். பாலேடு எல்லாம் கொடுக்கிறாள்!

அம்மா சொன்னது எனக்குப் பிடிக்க வில்லை. அம்மாவுக்குத் தெரியாமல் நான் ஜானகி வீட்டுக்குப் போய் அவளைப் பார்த்துக் கொண்டுதான் இருந்தேன்.

அம்மாவுக்கு ஏன் அவளைப் பிடிக்க வில்லை?



## இரண்டாம் காட்சி :

என் சாலாப் பாட்டி என்னமாய்க் கதை சொல்லுவாள்!

அதிலேயும் பேய்க் கதையெல்லாம் சொல்லும் போது யாராவது கிள்ளினால் கூடத் தெரியாது.

''உங்கப்பன் போயும் போயும் இந்த இடத்தை வாங்கி வீடு கட்டினான் பார்!" என்று ஒருநாள் ராத்திரி நொடித்துக் கொண்டாள் பாட்டி ரகசியமாக.

# புனிதன்

"ஏன் பாட்டி, இந்த இடத்துக்கு என்ன?" என்று கேட்டேன்.

பாட்டி சொன்னாள் : ''நான் உன்னாட்டம் இருக்கிறப்போ, இந்த ஊரிலே ஒரு கொள்ளை நோவு வந்தது. பிளேக்குன்னு சொல்றாங்களே அதுதான். ஒரு நாளைக்கு அஞ்சு ஆறுன்னு சாவாங்க. தனித்தனியாக் கொண்டு போய்ப் புதைச்சு மாளலை. அதனாலே என்ன பண்ணாங்க தெரியுமா? ஒரு பெரிய பள்ளமாத் தோண்டி, அப்படியே மொத்தத்தையும் இழுத்துட்டு வந்து போட்டு மூடிட்டுப் போயிட்டாங்க. அது எந்த இடம்னு நினைக்கறே? இதோ வீடு கட்டியிருக்கிறானே உங்கப்பன், இதே இடம்தான். நான் சொன்னேன். அதெல்லாம் ஒண்ணுமில்லேண்ணுட்டான். அப்பாலே தோட்டத்துப் பக்கம் கிணறு தோண்டினாங்க இல்லையா? அப்ப பார்த்தா அடியிலேருந்து எலும்பு எலும்பா வந்துட்டேயிருந்தது. எல்லாத்தையும் மூடி மறைச்சிட்டாங்க."

நான் நடுங்கிக் கொண்டே, "ஏன் பாட்டி, செத்துப் போனவங்கதானே பேயா வந்து அலைவாங்க? நம்ப வீட்டுக்குள்ளே ரொம்பப் பேய் வரும் இல்லை?" என்று கேட்டேன்.

"அதெல்லாம் நம்பளை ஒண்ணும் செய்யாது கண்ணு. கன்னிப் பேயுங்கதான் விடலைப் பசங்ககிட்டே எதுனா சேட்டை பண்ணும்."

பாட்டி என்ன சொல்கிறாள் என்று புரியாவிட்டாலும் 'நம்மை ஒண்ணும் செய்யாது' என்ற அளவில் மனசுக்கு இதமாய் இருந்தது.

இருந்தும் எனக்கு ரொம்ப நேரத்துக்குத் தூக்கம் வரவில்லை.

மணி பன்னிரண்டு அடித்து. எத்தனை

விவேகானந்தா கல்வி நிலைய தபால் முறை பயிற்சி மாணவர்களுக்கான நேர்முக தொடர்பு வகுப்பு (Contact Class) இம்மாதம் சேலத்தில் நடைபெறுகிறது.

# இமைக்காத இரவு




## பட்டுக்கோட்டை பிரபாகர்

இன்ஸ்பெக்டர் தங்கமுத்து விமான நிலைய அதிகாரியைத் தொடர்பு கொண்டு பேசினார்.

வெங்கட் சொன்னபடி முதல் நாள் இரவு பெங்களூர் விமானம் இயந்திரக் கோளாறு காரணமாக மறுபடி பெங்களூர் சென்று சென்னைக்கு அதிகாலை ஒன்று முப்பதுக்குத்தான் வந்து சேர்ந்தது என்கிற தகவலையும், அந்த விமானத்தில் வெங்கட் என்கிற பயணி பயணம் செய்திருக்கிறார் என்கிற தகவலையும் விமான நிலைய அதிகாரி உறுதி செய்தார்.

அடுத்ததாக வெங்கட் வேலை பார்க்கும் நிறுவனத்தின் மேனேஜரை நேரில் சென்று சந்தித்தார் தங்கமுத்து.

"மிஸ்டர் வெங்கட் பெங்களூர்ல எங்கே தங்கினார், உங்க அலுவலக வேலைகள் என்னென்ன செய்தார், இந்த விபரங்கள் வேணும்."

பதினைந்து நிமிடங்களில் அவர் கேட்ட விபரங்கள் யாவும் எழுத்து வடிவத்தில் தரப்பட்டது.

"மிஸ்டர் வெங்கட் பத்தி உங்க பர்சனல் கருத்து என்ன சார்?" என்றார் தங்கமுத்து.

"ரொம்ப உண்மையானவர், நேர்மையானவர், வேலை நேரத்தில அரட்டையடிக்கிறது அவருக்குப் பிடிக்காது. தன் முழுத் திறமையையும் நிறுவனத்தோட வளர்ச்சிக்காகப் பயன்படுத்தறவர். இப்படி ஒருத்தரை நாங்க ஆபீஸரா அடைஞ்சிருக்கிறதுக்காக நிர்வாகம் பெருமைப்படுது" என்றார் மேனேஜர்.

"நான் உங்க தனிப்பட்ட கருத்தைக் கேட்டேன். ஒரு மனுஷனுக்கு பலமும் இருக்கும். பலவீனமும் இருக்குமில்லையா? இவ்வளவு நேரம் நீங்க சொன்னதெல்லாம் அவரோட பலங்கள். அவரோட பலவீனங்களையும் சொல்ல முடியுமா?"

"பலவீனம்னு சொல்லணும்னா.... அவர் சிகரெட் நிறைய பிடிப்பார். ரொம்ப ரொம்ப பொறுமைசாலிதான். ஆனா எப்பவாவது கோபப்பட்டா ரொம்பவும் உணர்ச்சிவசப்பட்டு நடந்துக்குவார்."

"ஏதாச்சும் உதாரணம் சொன்னாத் தேவலாம்."



"எங்க ஆபீஸ்ல லிஃப்ட் ஆபரேட்டர், ஒரு லேடி கிளார்க் கிட்டே தரக் குறைவா கமெண்ட் அடிச்சுட்டான். அந்தப் பொண்ணு வெங்கட் கிட்டே புகார் சொல்ல, அவர் அவனைக் கூப்பிட்டு அரை மணி நேரம் ரொம்பப் பொறுமையா அட்வைஸ் பண்ணி மன்னிப்பு கேக்க வைச்சார். மன்னிப்பு கேட்டுட்டமேங்கற ஆத்திரத்தில மறு நாள் அவன் அந்தப் பொண்ணு கையைப் பிடிச்சி இழுத்துட்டான். வெங்கட்டுக்கு வந்தது பாருங்க கோபம். ஆபீஸ்ல எல்லாருக்கும் முன்னாடி போட்டுப் புரட்டி எடுத்துட்டார் அவனை. ஆனா ஒண்ணு, கோபமே படாத அவர் கோபப் படறார்னா கண்டிப்பா அதில நியாயம் இருக்கும்."

இன்ஸ்பெக்டர் தங்கமுத்து அதே அலுவலகத்தில் வேறு சிலரை விசாரித்த போதும், ஏறக்குறைய அதே கருத்தைத்தான் சொன்னார்கள்.

அடுத்து அவர் சந்தித்தது டாக்டர் மருது பாண்டியன்.

தங்கமுத்து காட்டிய ராதிகாவின் மெடிக்கல் ரிப்போர்ட்ஸ் அடங்கிய ஃபைலை மேலோட்டமாகப் புரட்டிப் பார்த்துவிட்டு...

"யெஸ்! இந்த பேஷண்ட்டுக்கு நான்தான் ட்ரீட்மெண்ட் கொடுத்தேன். எனி ப்ராப்ளம்!" என்றார் டாக்டர்.

"இன்னைக்குக் காலையில தன் வீட்ல தூக்குல தொங்கிட்டா டாக்டர்."

"ஓ!"

"தன் தற்கொலைக்குக் காரணமா தனக்கு வர்ற வயிற்று வலியைக் குறிப்பிட்டிருக்கா. இந்த லெட்டரைப் படிங்க."

ராதிகா எழுதி வைத்த கடிதத்தின் ஜெராக்ஸ் பிரதியை டாக்டரிடம் கொடுத்தார் தங்கமுத்து.

"வாட் நான்சென்ஸ்! அந்தப் பொண்ணை எனக்கு நல்லா நினைவிருக்கு. மூணு நாலு தடவை பார்த்துட்டேன். கர்ப்பப் பையை ஆபரேட் செய்து அகற்ற வேண்டியிருக்கிறதை நானே பக்குவமா எடுத்துச் சொன்னேன்."

"அதுக்கு அவங்க ரியாக்ஷன் என்ன?"

"கலங்கிட்டாங்க. நேச்சுரலி! ஒரு கல்யாணமாகி, குழந்தை இன்னும் பெத்துக்காத பொண்ணுகிட்டே கர்ப்பப்பையை எடுக்கணும்னு சொன்னா எப்படி தாங்கிக்க முடியும்? அழுதாங்க. எனக்கு ஆபரேஷன் வேணாம், முருகன் என்னை குணப்படுத்துவான்னு சொன்னாங்க. கட்டியோட நிலையை உத்தேசிச்சி சீக்கிரம் ஆபரேட் பண்றது நல்லதுன்னு சொன்னேன். அழகான குழந்தையாப் பார்த்து தத்து எடுத்துக்கங்க, நானே ஏற்பாடு பண்றேன்னு சொன்னேன். அடுத்தடுத்த சந்திப்புல கொஞ்சம் கொஞ்சமா எடுத்துச் சொல்லி அவங்களைக் கன்வின்ஸ் பண்ணிட்டு வந்தேன். இப்படி திடுதிப்புன்னு ஒரு முடிவெடுத்துட்டாங்களே..."

"ஏன் டாக்டர், நீங்க பல தடவை அட்வைஸ் செஞ்சதில ராதிகா ஆபரேஷன் செய்துக்கற முடிவுக்கு வந்தாங்களா?"

"தீர்மானமா வரலை. ஆனா கடைசியா பார்த்தப்போ 'நீங்க சொல்றதெல்லாம் நியாயமாத்தான் படுது டாக்டர். வலி இல்லாதப்போ ஆபரேஷன் வேணாம்னு தோணுது. வலி வந்து துடிக்கிறப்போ பேசாம செய்துக்கலாம்னு தோணுது. வரக்கூடாது, வந்துடுச்சி, அதுக்கு வழி நீங்க சொல்றீங்க. நீங்க படிச்சவங்க, நல்லதுக்குத்தானே சொல்வீங்க. கூடிய சீக்கிரம் முடிவு பண்ணறேன் டாக்டர்'னு தெம்பா சொன்னாங்க."

"நீங்க சொல்றதைப் பார்த்தா நேரடியா சம்மதம்னு சொல்லாட்டியும், ஆபரேஷனுக்கு சம்மதிக்கிற மனநிலைதான் தெரியுது டாக்டர்."

"யெஸ், எனக்கும் அப்படித்தான் பட்டுது."

"கடைசியா நீங்க பார்த்தது எப்போ?"

"இதோ ஃபைல்லயே இருக்கே லாஸ்ட் விசிட் பிரிஸ்கிருப்ஷன். ஒரு வாரம்

முன்னாடிதான் அப்படிச் சொன்னாங்க. ஒரு வாரத்துக்குள்ளே எப்படி திடீர்னு நம் பிக்கையை விட்டாங்க?" என்றார் டாக்டர் அந்த ஃபைலில் கடைசியாகக் கோர்க்கப் பட்டிருந்த தேதியிட்ட பிரிஸ்கிருப்ஷனைக் காட்டி.

"அதான் என் சந்தேகமும்" என்று எழுந்து கொண்டார் இன்ஸ்பெக்டர் தங்க முத்து.

ஆஸ்பத்திரியை விட்டு வெளியே வந்து ஸ்டேஷனுக்கு வந்தார்.

சப்-இன்ஸ்பெக்டர் கதிர்வேல், "சார், டாக்டர் திவாகர் போன் செய்தார், போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட் ரெடியா இருக்காம். உங்களைக் கொஞ்சம் நேர்ல வரச் சொன்னார்" என்றார்.

"சரி, நீங்க ஒரு காரியம் பண்ணுங்க. பெங்களூர் போலீசைப் பிடிங்க. வெங்கட் அங்கே தங்கின ஹோட்டல் அட்ரஸ், போன பிஸினெஸ், ஆபீஸ் விபரங்கள் இதில இருக்கு. இதைக் கொடுத்து இதெல்லாம் சரிதானான்னு அர்ஜெண்ட்டா செக் பண்ணி தகவல் கொடுக்கச் சொல்லுங்க."

தங்கமுத்து உடனே புறப்பட்டார்.

டாக்டரைச் சந்திக்கப் போகிற வழியில் ஃபாரன்சிக் லேபுக்குச் சென்று அங்கே ஆபீசர் வித்யாசாகரைச் சந்தித்தார்.

"என்ன சார், ரிப்போர்ட் தயாரா?" என்றார் தங்கமுத்து.

வித்யாசாகர் தயாராக இருந்த கவரை எடுத்து நீட்டியபடி, "நீங்க எனக்கு ரெண்டு வேலை கொடுத்திருந்தீங்க. ஒண்ணு, ஒரு பொண்ணோட உள்பாவாடையில இருக்கிற கறை என்னன்னு அனுப்பிக் கேட்டிருந்தீங்க. பதில் : அது ஒரு ஆணோட விந்துக் கறை. அடுத்து அந்தப் பொண்ணு எழுதின தற்கொலை லெட்டரும், வேறு சில கையெழுத்து மேட்டர்களும் கொடுத்து ரெண்டையும் ஒப்பிட்டுப் பார்க்கச் சொல்லியிருந்தீங்க. பதில் : அந்தத் தற்கொலை லெட்டரும், மற்ற கையெழுத்துக்களும் ஒண்ணுதான். அது அந்தப் பொண்ணோட கையெழுத்தேதான்" என்றார்.

"இம்பாஸிபிள்! அதைமட்டும் கொஞ்சம் இன்னொரு தடவை சரியாப் பார்த்துடுங்க சார் ப்ளீஸ். ஏன்னா இந்த தற்கொலையை இப்போ நான் அழுத்தமா சந்தேகப்படறேன். கொலையை தற்கொலையாக் காட்ட மகத்தான முயற்சி நடந்திருக்கிறதா நினைக்கிறேன். ஸோ..."

"மிஸ்டர் தங்கமுத்து, என் சர்வீஸ்ல எப்பயாவது தப்பு நடந்திருக்கா? அல்ட்ரா வயலெட் கதிர்களைப் பாய்ச்சி நானே நின்னு பார்த்துத்தான் சொல்றேன். அந்தப் பொண்ணு ராதிகாவோட கையெழுத்தேதான் அது. எப்படிச் சாத்தியம்னு நீங்கதான் மண்டையை உடைச்சிக்கிட்டு யோசிக்கணும்" என்றார் வித்யாசாகர்.

"தேங்ஸ் சார்."

கை குலுக்கிப் புறப் பட்டார்.

அரசாங்க ஆஸ்பத்திரியில் டாக்டர் திவாகர் கொடுத்த பிரேதப் பரிசோதனை அறிக்கையில் சில ஆச்சரியமான தகவல்கள் இருந்தன.

# மோட்டார் சைக்கிள் பரிசுத்திட்டம்

## போட்டி - 5

இந்த இதழின் ஏதோ ஒரு பக்கத்தில் கட்டுரையிலோ, கதையிலோ, துணுக்குச் செய்திகளிலோ - சம்பந்தமில்லாத ஒருவரி வேண்டுமென்றே சேர்க்கப்பட்டுள்ளது. அது எந்த வரி, எந்த கதை/கட்டுரையில், எந்தப் பக்கம் - என்று கண்டுபிடிக்க வேண்டியது இ.வா.போ. அதாவது இந்த வாரப் போட்டி.

கூப்பனை நிரப்பி 26 வது வார முடிவில் மொத்தமாக அனுப்புங்கள். அதிகப் போட்டிகளில் கலந்து கொண்டு அதிக வெற்றி பெறுபவருக்குப் பரிசு. தவிர ஆறுதல் பரிசுகளும் உண்டு! ஆசிரியர் தீர்ப்பே முடிவு. ஆல் தி பெஸ்ட்!

---

போட்டி - 5

சம்பந்தமில்லாத வரி :..........................................

எந்தக் கதை/ கட்டுரை :..........................................

பக்கம் :..........................................

பெயர் :..........................................

முகவரி :..........................................

DEAR WELL WISHERS




HERE'S WHAT YOU GET !

**Attractive Inaugural Offer On Deposits**



**Maxima Group of Companies**

Regd. Office : 1, Vedantha Desikar Street, R.K. Mutt Road, Near Luz Bazaar, Mylapore, Madras - 600 004. Phone : 4941849 Fax : 044-4347655. Grams : MAXFIN

Branch Office : 146, Eldams Road, Madras - 600 018. Phone : 45[illegible]50

MAXIMA

# Adds another feather to its cap

*By*

*Opening*

**Maxima Benefit Fund Limited**

and a branch of

**Maxima Investment & Finance Company**

At

**Jayam Building**

Ist Floor, AA-147, III Avenue

(Near Anna Nagar Rountana)

Anna Nagar, Madras - 600 040.

On

**14th Oct '94**

At

**9.30 A.M.**

And, to make this possible

our office will be inaugurated by

**someone very important.**

**This, someone, ofcourse is no one but you.**

So, Kindly accept our humble invitation.

And give us a chance to serve you.

**MAXIMA - *MAXIMUM DEPENDABILITY***

> ● ஒருவன் தன் சகோதரியைத்தேடி கடல்வரை போவான். காதலியைத் தேடி, கடலுக்குள்ளும் போவான்!
>
> — ஜெர்மானியப் பழமொழி/பா. அச்சுதன்

ஆச்சரியமான தகவல் 1 :

ராதிகாவின் மரணம் அக்மார்க் தற்கொலைதான். உடலின் எல்லா பாகங்களின் நிலைகளும் தற்கொலை மரணத்தில் ஏற்படும் நிலைகளிலேயே இருக்கின்றன, எனவே இது நூறு சதவிகிதம் தற்கொலை.

ஆச்சரியமான தகவல் 2 :

பெண்ணின் ரத்தத்தில் போதைப் பொருளின் சேர்க்கை இருக்கிறது. இறந்த பெண் சுமார் பதினோரு மணியளவில் போதைப் பொருளை வாய் வழியாக உட்கொண்டிருக்க வேண்டும்.

ஆச்சரியமான தகவல் 3 :

இறந்த பெண் உடலுறவு கொள்ளப் பட்டிருக்கிறாள். உடலின் எந்த பாகத்திலும் கிறலோ, காயமோ இல்லாததால், பெண்ணின் இணக்கத்துடன் நிகழ்ந்த உறவாகவே இதைக் கொள்ளலாம்.

அறிக்கை முழுவதையும் மீண்டும் படித்துப் பார்த்த இன்ஸ்பெக்டர் தங்கமுத்து, "டாக்டர், வெங்கட் சொன்ன ஸ்டேட்மெண்ட்ல நிறைய பொய் இருக்கிறது புரியுது. ஒரு மாசமா எங்களுக்குள்ளே உறவு வைச்சுக்கலைன்னு சொன்னார், ரிப்போர்ட் அதைப் பொய்யின்னு சொல்லுது. ராதிகா ஆபரேஷனே வேணாம்னு பிடிவாதம் பிடிச்சதா சொன்னார். ஆனா ராதிகாவுக்கு ட்ரீட்மெண்ட் கொடுத்த டாக்டர் போன வாரம் சந்திச்சப்போ கிட்டத்தட்ட சம்மதிக்கிற நிலைக்கு ராதிகா வந்துட்டதா சொல்றார். அதனால நிச்சயமா ஒரு சதி தெரியுது. ஆனா ரெண்டு விஷயங்கள் குழப்புது" என்றார்.

"என்ன?" என்றார் டாக்டர்.

"இது தற்கொலைதான்னு நீங்க உறுதியா சொல்றீங்க. தற்கொலை லெட்டர் ராதிகாவோட கையெழுத்துதான்னு லேபுல அடிச்சு சொல்றாங்க. இதான் இப்போ குழப்பமா இருக்கு. சவாலா இருக்கு. நீங்க ரெண்டு பேரும் மாத்திச் சொல்லியிருந்தா இந்நேரம் வெங்கட்டை நான் அரெஸ்ட் பண்ணி உள்ளே தள்ளியிருப்பேன்."

"பாடி நேச்சர்ல தற்கொலை சிம்ப்டம்ஸ் கரெக்டா இருக்கே சார். அதெப்படி மாத்தி எழுத முடியும்? என் அப்சர்வேஷனை எழுதிருக்கேன். குடும்பப் பொண்ணுன்னு சொல்றீங்க. ஆனா போதை மருந்து சாப்பிட்டிருக்காளே, அப்படின்னா அவ யோக்யமான பொம்பளையா எப்படி இருக்க முடியும்? அந்த லைன்ல கொஞ்சம் யோசிச்சுப் பாருங்க இன்ஸ்பெக்டர்" என்றார் டாக்டர் திவாகர்.

தங்கமுத்து சிந்தனையோடு ஸ்டேஷனுக்கு வந்தபோது சப்-இன்ஸ்பெக்டர் ஏதோ அவசர செய்தி வந்து லீவு போட்டு விட்டுப் போய் விட்டதாகவும், பெங்களூர் போலீசிலிருந்து வந்த தகவலை எழுதி வைத்திருப்பதாகவும் சொல்லிக் கொடுத்தார் ஏ.எஸ்.ஐ.

அதில் பெங்களூர் போலீஸ் இங்கிருந்து தரப்பட்ட தகவல்கள் யாவும் சரியாக இருப்பதாக உறுதி செய்திருந்தது.

பேப்பர் வெய்ட்டை உருட்டியபடி சிந்தனையில் ஆழ்ந்த இன்ஸ்பெக்டர் தங்கமுத்துவுக்கு சட்டென்று ஒரு கோணம் மின்னலிட.....

உடனே புறப்பட்டு வெங்கட்டின் வீடு வந்தார். ராதிகாவின் உடலை எரித்து விட்டுத் திரும்பியிருந்த உறவினர் கூட்டம் வீட்டில் நிறைய இருந்தார்கள்.

சோகப் பார்வையுடன் நொந்து போய் அமர்ந்திருந்த வெங்கட்டை தனியாக மொட்டை மாடிக்கு அழைத்து வந்து—

"வெங்கட், நேரா வர்றேன். நான் உங்களை சந்தேகப்படறேன். உங்க மனைவி ராதிகாவோட மரணம் தற்கொலைதான். ஆனா அவங்க தற்கொலைக்கு உங்களால வற்புறுத்தப்பட்டிருக்காங்கன்னு நான் சொல்றேன்" என்றார்.

அதிர்ந்த வெங்கட், "என்ன சார் சொல்றீங்க?" என்றான்.

"ஒரு கற்பனை காட்சி சொல்லட்டுமா? நீங்க பெங்களூர்லேர்ந்து திரும்பி வந்தீங்க. திடீர்னு வந்தீங்க. தகவல் தராம வந்தீங்க. வந்தப்போ நீங்க பார்த்த காட்சி... கட்டில்ல உங்க மனைவி யாரோ இன்னொருத்தரோட! அவன் ஓடிட்டான். உங்க மனைவி நடுங்கி[illegible]ராங்க. நீங்க ஆத்திரப் பட்டீங்க. இந்[illegible]யம் சந்தி சிரிக்கக் கூடாதுன்னா உங்க மனைவி நீங்க சொல்றபடி செயல்பட வற்புறுத்தினீங்க. கைல ஏதோ ஆயுதம் வெச்சக்கிட்டு கூட நீங்க மிரட்டி உங்க வற்புறுத்தலுக்கு சம்மதிக்க வெச்சிருக்கலாம். கரெக்டா?"

கண்கள் சிவந்த வெங்கட், "நோ!" என்று கத்தினான். "ராதிகா செத்ததுக்குக் காரணம் நான் இல்லைடா. நீங்க தான்டா!" என்று வெறித்தனமாக இன்ஸ்பெக்டர் சட்டையைப் பிடித்து உலுக்கினான்.

(தொடரும்)

## நீங்கள் சொந்தத்தில் தொழில் செய்ய விரும்பினால் மூன்று விஷயங்கள் தேவை.





## குறிக்கோள்... புத்திசாலித்தனம்... மற்றும்...

# ...மார்கதர்சி!

உங்கள் அலுவலக வாழ்க்கை அலுத்துவிட்டது. போதும் போதுமென்றாகிவிட்டது... 'முதலாளி சொல்வதுதான் சரி' என்று ஏற்கும் கட்டாயம். நீங்களே ஏன் முதலாளியாகக்கூடாது? அப்படி ஆகமுடியாமல் இருப்பதற்கான காரணம் உங்களுக்கே தெரியும். ஆனால், இந்த நிலையை மாற்ற எதுவுமே செய்ய முடியாதா?

உங்களைத் தலைமைப் பொறுப்பில் அமர்த்த மார்க்கதர்சி ஒரு வழிகாட்ட முடியும். சிட் ஃபண்ட் மூலமாக...

உங்களுக்குத் தேவையான தொகைகளைச் சுலபமாக அடையும் வழியை மார்கதர்சி காட்டுகிறது. இந்த வழியை பின்பற்றி கடந்த முப்பத்திரண்டு ஆண்டுகளாக ஆந்திராவில் லட்சக்கணக்கானோர் மார்கதர்சியின் உதவி பெற்றுப் பயனடைந்து வருகிறார்கள். இப்போது உங்கள் முறை!

உங்கள் செலவுகளுக்கேற்ப திட்டமிட்டுக் கொள்ள மார்கதர்சி சிட் ஃபண்ட் உங்களுக்கு உதவுகிறது. ஒவ்வொரு மாதமும் ஒரு குறிப்பிட்ட தொகையைச் செலுத்தி வரலாம். உங்களுக்குத் தேவை ஏற்படும்போது, செலுத்திய தொகையைக் காட்டிலும் அதிகமான தொகையைக் கேட்டுப் பெறலாம். 'ஏன், எதற்கு' என்று யாருக்கும் நீங்கள் விளக்கமளிக்க அவசியம் இருக்காது. நீங்கள் பெறக் கூடிய தொகையின் அளவை மற்றவர்கள் தீர்மானிக்கப் போவதுமில்லை. நீங்கள் சேரும் சிட் ஃபண்ட் திட்டத்தையும், தொகையின் அளவையும், மற்றும் மாதாந்திர தவணைகள் குறித்தும், திரும்ப கட்டும் சக்தியைப் பொறுத்து நீங்களே முடிவெடுக்கலாம்.

மார்கதர்சி பற்றியும் அதன் சிட் ஃபண்ட் திட்டங்கள் பற்றியும் இன்னும் அதிகமாகத் தெரிந்து கொள்ள இன்றே எங்களை அணுகுங்கள்.

m

## மார்கதர்சி சிட் ஃபண்ட் (மெட்ராஸ்) லிமிடெட்,

ஏ 1 & 2, பார்சன் மானர்

602 அண்ணா சாலை, சென்னை – 600 006,

தொலைபேசி : 8266002

வாழ்க்கையைப் போல் உங்கள் தேவைகளும் நிஜமானவை!

32 வருடங்களாக ஆந்திராவில் முதன்மை பெற்று 27 கிளைகளுடன் விளங்கும் கம்பெனியின் சென்னை துணை நிறுவனம்.

# கல்கி Vs விகடனா? அல்லது கே.பி. Vs பாலனா?

● **கே. இளங்கோ, திருச்சி.** ❑

***?** ஆட்சியில் பங்கு கேட்கிறதே காங்கிரஸ், கூட்டு மந்திரி சபை தமிழகத்துக்கு சரிப்படுமா?*

! கூட்டு மந்திரி சபை என்பது ஆரோக்கியமான விஷயமே. ஒருவரை ஒருவர் அனுசரித்தும் தவறுகளைத் தவிர்த்தும் சமன் செய்து கொண்டு போகலாம். ஆனால் "யார் பெரியவன்?", "நீ என்ன சொல்வது?" போன்ற மண்டை கனப் பிரச்னைகள் எழுமானால் உ.பி. கதைதான் இங்கும்.

● **எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.**

*? "பெயரிலேயே ஜெயம் உள்ளதால் ஜெயலலிதாவுக்கு என்றுமே தோல்வி கிடையாது" என்று அமைச்சர் ரகுபதி கூறுகிறாரே?*

! "ஜால்ரா திலகம் என்று யாருக்குப் பெயர் வைக்கலாம்?" என்று கேள்வி எழுப்புகிறார், சென்னை - 48 அம்பிதம்பி! பதில் கிடைத்ததா மிஸ்டர் அம்பி?

● **டி. ரிஷி, காரைக்குடி.**

*? தமிழன் தலைகுனிந்து இருப்பதற்குக் காரணம் என்ன?*

! 'பாத தரிசனமே பாக்கியம்' என்று கருதுவதால்.

● **தமிழ்பரிதி, நெல்லிக்குப்பம்.**

*? யாழ்ப்பாணத்தில் அமைதி திரும்புமா?*

! எங்கே, சமாதானம் என்று சொல்கிறார்களே தவிர, பரஸ்பரம் தாக்குதல் நிற்கவில்லையே!

● **எம். சூர்யா, நாட்டரசன்கோட்டை.**

*? ம.தி.மு.க. விடுதலைப் புலிகளை ஆதரிக்கிறதா?*

! ஈழத்தில் ஆதரிப்பார்களாம்; இந்தியாவில் ஆதரிக்க மாட்டார்களாம். புரிகிறதோ?

● **ம. குமரன், வலங்கைமான்.**

*? சித்த வைத்திய ஆலோசனைக் குழுவிலிருந்து விலகப் போவதாக கி.ஆ.பெ. அறிவித்துள்ளாரே?*

! தள்ளாத வயதில் 'சென்னைக்குப் பலமுறை அலைந்தும் முதல்வரை நேரில் சந்திக்க முடியாததால் எந்தப் பிரச்னையையும் தீர்க்க முடியவில்லை' என்கிறார். ஆலோசனைக் குழு தலைமை ஏற்கும் முன்பே இப்படித்தான் இருக்கும் என்பதாக இதை ஆலோசித்திருக்கலாமே!

● **புளியாரை கணேசன், சென்னை.**

*? சேலம் அருகே டி.எஸ்.பி. வீட்டிலேயே கொள்ளை நடந்திருக்கிறது...?*

! சென்னையில் போலீஸ் இன்ஸ்பெக்டரே பெண்ணின் கழுத்திலிருந்து சங்கிலியைப் பறித்ததை விட சேலம் சம்பவம் மோசமானதில்லை.

● **ஆர். இருதயராஜ், திருபுவனம்.**

*? "தனிநாடு கோரிக்கையைக் கைவிடத் தயார்" என்று விடுதலைப் புலிகள் அறிவித்துள்ளனரே?*

! புலிகள் தங்கள் உடல் மீதுள்ள வரிகளை அழித்து விடத் தயார் என்று கூறுவது போல!

● **என். சுந்தரி, சிதம்பரம்.**

*? கல்கி Vs விகடனா? அல்லது கே.பி. Vs. பாலனா?*

! இரண்டுமில்லை. கல்கிக்கும் சரி, கே.பிக்கும் சரி, விகடனிடமும் பாலனிடமும் மிகுந்த மதிப்பு உண்டு. கே.பி., ஈகோ பிரச்னை அல்ல; தன்னம்பிக்கையின் வெளிப்பாடு என்பதை மிகத் தெளிவாகத் தமது கட்டுரையில் வெளியிட்டிருக்கிறார்.

● **எஸ். குமார், காரைக்குடி.**

*? மகாத்மா காந்தி சிலைக்கு நேர்ந்த கதியைப் பார்த்தீரா?*

! தென்னாப்பிரிக்காவில் எந்த ஸ்டேஷனில் மகாத்மாவை ஓடும் ரயிலிலிருந்து கீழே

• பிரதமரா என்ன?



• கவலை வேண்டாம்!

**❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :**
**கே. இளங்கோ,**
**அ 83, 3ம் வீதி,**
**தீரன் நகர், பிராட்டியூர்,**
**திருச்சி - 620 009.**

தள்ளினார்களோ, அந்த ரயில் நிலையத்திலேயே சிலை திறந்து மரியாதை செய்திருக்கிறார்கள் என்பதை எண்ணி சற்று ஆறுதல். நாம் அவமதித்தாலும் உலகம் போற்றும்.

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

? "பள்ளியில் படிக்கும் போது நூற்றுக்கு நூறு வாங்காததால் தான் அரசியல்வாதியானேன்" என்று குமரி அனந்தன் கூறியுள்ளது?

! மாணவர்களுக்குத் தரப்பட்ட தவறான முன்னுதாரணம். குமரி அனந்தன் கூறியிருந்தாலும் குற்றம் குற்றமே!

● எஸ். என். ராகவன், பெல்லாரி.

? மறைந்த தொழிலதிபர் ராமகிருஷ்ண பஜாஜ் பற்றி?

! தந்தை ஜம்னாலால் பஜாஜ் போலவே காந்தி பக்தர். தனிநபர் சத்யாகிரஹத்தில் பங்கேற்க அண்ணலின் சிறப்பு அனுமதியைப் பெற்ற போது அவருக்கு வயது 18. அப்போது ஒன்பது மாதங்களும் பிறகு 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்தில் மூன்று ஆண்டுகளும் சிறைத் தண்டனை அனுபவித்தார். பின்னால் கருத்து மாறுபாடு காரணமாக காங்கிரஸிலிருந்து விலகி எக்கட்சியையும் சாராமல் காந்தியக் கட்சியில் மட்டுமே இருந்தார். காந்திஜியின் தர்மகர்த்தா கொள்கையை ஏற்று சமுதாயப் பிரக்ஞையுடன் தொழில் நடத்தினார்.

• "பிடிக்க முடியாது!" • பெயரிலேயே ஜெயம்!



# நீங்கள் கேட்டவை - தராசு



• காந்தியத் தொழிலதிபர்!



• கலெக்டர்கள் வருகை!



• குற்றமே!



• விலகுவார்?

● சின்னஞ்சிறு கோபு, மங்கைநல்லூர்.

? கல்கி தீபாவளி மலருடன் இலவசப் பரிசு கிடையாதா?

! உண்டே! தீபாவளியும், மலர் தரும் மகிழ்ச்சியும்!

● லட்சுமி செங்குட்டுவன், வேலூர்.

? ராஜீவ் நினைவாலயத்துக்கு சோனியா வரட்டும், ஆனால் அதற்கு வானொலியில் நேர்முக வர்ணனை தேவையா? சோனியா என்ன இந்நாட்டின் பிரதமரா?

! சோனியா பிரதமர் இல்லை. ஆனால் நினைவாலய நாயகன் ராஜீவ் பிரதமராக இருந்தவர்

● பொன் குமார், சேலம்.

? ஜெயலலிதா ஆட்சியில் பெண்களின் நிலை எவ்வாறு உள்ளது?

! தோழியின் நிலை ஜகஜ்ஜோதியாக இருப்பதைப் பார்த்து பெண்களின் நிலையும் அப்படி என்று எண்ணி விடாமலிருந்தால் சரி!

● எஸ். நாரம்புநாதன், காஞ்சிபுரம்.

? ராஜீவ் காந்தி நினைவாலயத்துக்கு சோனியா வந்த போது முதல்வர் வரவேற்காதது ஏன்?

! சௌகரியமாக திண்டுக்கல் போய் விட்டார். ஒருவேளை விமான நிலையத்தில் சந்திக்க நேர்ந்துவிடப் போகிறதே என்று தமது புறப்பாட்டைக் கூட அரை மணி நேரம் தள்ளிப் போட்டதாகச் செய்தி! இந்த லட்சணத்தில்தான் "சோனியா-ஜெ புதிய கூட்டணி" பற்றி சில பத்திரிகைகள் கதை எழுதுகின்றன!

● இரா. சம்பத்குமார், இராசிபுரம்.

? "ஐம்பது ஆண்டுகள் ஆனாலும் என்னைப் பிடிக்க முடியாது" என்று தேவாரத்துக்கு வீரப்பன் கடிதம் எழுதியிருக்கிறானே?

! தேவாரம் கவலைப்பட வேண்டியதில்லை. ஐம்பதாண்டுகளுக்கு முன் மூப்பு வீரப்பனைப் பிடித்துவிடும்!

● வை.கு. ராஜராஜன், திருபுவனம்.

? 64 கலெக்டர்கள் குன்றக்குடி வருவது பற்றி?

! அனுபவப் பாடம் கற்க ஐ.ஏ.எஸ்கள் வரட்டும். அடிகளார் செயல்பாடு எல்லா மாவட்டங்களுக்கும் பரவட்டும். வரவேற்போம்.

# ஒவ்வொரு விழாவிலும் ஸ்ரீராம் அளிப்பது பரிசுகள் மட்டும்தானா? அல்ல.

ஒரு பசுமையான உறவின்
ஆரம்பம். இனிய
நினைவுகளுக்கு
ஒரு தொடக்கம்.

ஸ்ரீராம்
விஜயதசமி விழா
பரபரப்பான 11 நாட்கள்
அக். 4 - 14, 1994.

ஆண்டுகள் எத்தனை கடந்தால் என்ன? உங்களுக்கும் ஸ்ரீராமுக்கும் இடையே உள்ள உறவு பசுமையானது. அந்த உறவின் இனிமையை நீங்கள் மீண்டும் மீண்டும் உங்கள் நெஞ்சங்களில் அசை போட்டுச் சுவைக்க உதவும் வகையில் ஒவ்வொரு விழாக் காலத்திலும் ஸ்ரீராம் உங்கள் மீது பரிசு மழை பொழிகிறது.

ஸ்ரீராமுடன் கொண்டுள்ள உறவினால் நீங்கள் அடைந்துள்ள பயன்கள்தாம் எத்தனை, எத்தனை! சொந்த வீடு, சொந்தத்தில் தொழில், குழந்தைகளுக்கு உயர்மட்டக் கல்வி... இப்படி நீங்கள் — ஏன் நாங்களும்தான் — நினைத்துப் போற்றும் நிகழ்ச்சிகள் எத்தனையோ!

இதோ... விஜயதசமி விழா. நம்முடைய உறவைப் புதுப்பித்துக்கொள்ள மீண்டும் ஒரு வாய்ப்பு.

நினைவிருக்கட்டும். உங்களை மகிழ்விக்கும் பரிசுகளும் காத்திருக்கின்றன — எப்போதும் போல. ரூ.75,000 வரையில் உள்ள சீட்டுகளை எடுப்பவர்களுக்கு, பொதுத்துறை, தனியார்துறை, அரசுப்பணி அல்லது அங்கீகாரம் பெற்றுள்ள நிறுவனங்கள் ஆகியவற்றில் பணி புரியும் மூன்று பேர் உத்தரவாதம் அளித்தால் போதுமானது.

## சந்தாதாரர் பரிசு

| வ. எண் | சீட்டின் மதிப்பு* | சந்தாதாரர் பரிசு |
|---|---|---|
| 1. | 250 x 40 = ரூ.10,000/- | 3 கிராம் வெள்ளிக்காசு |
| 2. | 500 x 30 = ரூ.15,000/- | S.S. சாஸ்பாட் (S.S. Saucepot) |
| 3. | 625 x 40 = ரூ.25,000/- | ஜீரோ ஆயில் கடாய் |
| 4. | 1000 x 30 = ரூ.30,000/- | S.S. சர்விங் பௌல் |
| 5. | 1000 x 50 = ரூ.50,000/- | காஸி காப்பர் பாட்டம் மினி ஃப்ரை |
| 6. | 1250 x 60 = ரூ.75,000/- | மில்டன் அல்ட்ரா காஸரோல் |
| 7. | 3000 x 30 = ரூ.90,000/- | HM மில்க் பான் |
| 8. | 2500 x 40 = ரூ.1,00,000/- | காப்பர் பாட்டம் ஸ்டுபான் |
| 9. | 5000 x 30 = ரூ.1,50,000/- | மில்டன் பாஷன் செட் |
| 10. | 5000 x 40 = ரூ.2,00,000/- | 25 கிராம் வெள்ளிக்காசு (இரண்டு) |
| 11. | 10000 x 30 = ரூ.3,00,000/- | 2 கிராம் தங்கக் காசு |
| 12. | 20000 x 25 = ரூ.5,00,000/- | 4 கிராம் தங்கக் காசு |

* நுழைவுக் கட்டணம் தனி

வேலையில் இருக்கும் பெண்மணி ரூ.15,000 வரையில் உள்ள சீட்டுகளை எடுக்கும்போது அவருடைய கணவரின் உத்தரவாதமே போதுமானது.



1



2



3



4



5



6



7



8



9



10



11

12

முன் அங்கீகாரம் பெறப்பட்டது.




# மர்மமாகக் காத்திருக்கும் அந்தப் பரிசு என்ன?

**புதிய சந்தாதாரரை அறிமுகப்படுத்தும் ஒவ்வொருவருக்கும் ஒரு பரிசு மறைந்து காத்திருக்கிறது...**



ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் தட்டு முதல் தங்கக்காசு வரை எண்ணற்ற பரிசுகள்.

மீண்டும் விஜயதசமி விழா. கூடவே ஆவலைத்தூண்டி மகிழ்வூட்ட மறைந்து காத்திருக்கும் பரிசுகள். அவை என்னவென்று தெரிந்துகொள்ள வேண்டுமா? கத்திரித்துப் பாருங்கள். கண்டு கொள்ளுங்கள்.

அறிமுகப்படுத்துவோர் கூப்பன் ஒவ்வொன்றிலும் ஒரு பரிசின் பெயர் வெளித்தெரியாமல் இடம் பெற்றிருக்கும். இப் பரிசைப் பெற்றுச் செல்ல நீங்கள் செய்ய வேண்டியது எல்லாம் இதுதான் — ஒரு புதிய சந்தாதாரரை அறிமுகப்படுத்துங்கள். கூப்பனின் ஒரு ஓரமாகக் கத்திரியுங்கள். உங்களுக்காகக் காத்திருக்கும் பரிசின் பெயர் கண்முன்னே!

ரகரகமான பரிசுகள்... வாஷிங் மெஷின், தங்கக்காசு முதல் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பிளேட் வரை.

அதுமட்டுமல்ல. நீங்கள் எத்தனை பேரை வேண்டுமானாலும் புதிய சந்தாதாரராக அறிமுகம் செய்யலாம். ஒவ்வொரு புதிய அறிமுகத்துக்கும் ஒவ்வொரு பரிசு உங்களுக்காக மறைந்து காத்திருக்கும்.

நினைவிருக்கட்டும். கூப்பனை ஸ்ரீராம் கிளை மேலாளர் முன்னிலையில் மட்டுமே கத்திரிக்க வேண்டும்.




Shriram Group Companies All India Deposit Mobilisation Drive is on.




**ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி. லிமிடெட்.**

**ஸ்ரீராம் சிட்ஸ் தமிழ்நாடு பி. லிமிடெட்.**

நிர்வாக அலுவலகம்: ''சுப்பிரமணியம் பில்டிங்'', 1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.
போன்: 8520700|8523932|8522651|8525536|8520797

அறிமுகப்படுத்துவோர் பரிசு இப்போதுள்ள சந்தாதாரர்களுக்கு மட்டுமே

*ஸ்ரீராம் சிட்ஸ் — உங்கள் வளமைக்குப் பாதை.*

ADWAVE/SC/4824/TAM B

# வசனம்

**AN ORDINARY SENTENCE WHEN PUT INTO PROPER PLACE SUDDENLY ACQUIRES BRILLIANCE.**

**- ROBERT BRESSON.**

(ஃப்ரெஞ்ச் திரைப்பட இயக்குநர்)

"ஓடினான்; ஓடினான்; வாழ்க்கையின் ஓரத்திற்கே ஓடினான்" - 'பராசக்தி'யில் கலைஞர்.

"எனக்கு மரத்துப் போய் விட்டது" - 'அரங்கேற்றம்'.

"மாது வந்திருக்கேன்" - எதிர் நீச்சல்.

"கல்யாணத்துக்கு முன்னால் ஒரு பெண் கர்வமா இருக்கலாம்; கர்ப்பமாகத்தான் இருக்கக் கூடாது" - அவள் ஒரு தொடர்கதை.

"பொடிமட்டை தும்முவதில்லை!" - நவக்கிரகம்

"இன்னிக்கி செத்தா நாளைக்குப் பால்" - புதுப்புது அர்த்தங்கள்.

'திரைப்படங்களில் ஆங்காங்கே திறமையுடன் பிரயோகப்படுத்தப்படும் ஒரு சாதாரண வாக்கியம், உபயோகப்படுத்துகின்ற முறையிலே மிகப் பெரிய முக்கியத்துவம் பெறுகிறது' என்று Robert Bresson கூறியிருக்கும் கருத்தில் எத்தனை பெரிய உண்மையிருக்கிறது என்பதை அனுபவபூர்வமாக உணர்ந்தவன் நான். கலைஞரின் பராசக்தி வரிகள் குறள் வாசகம் போல தமிழ்மொழியின் இலக்கியத்திற்குள் சங்கமம் ஆகி விட்டது.

வாக்கியங்கள் இருக்கட்டும்; சில வார்த்தைகள்! அகராதியில் மட்டுமே காணப்படும் சில ஒற்றை வார்த்தைகளுக்கு தனிப்பட்ட முறையிலே முக்கியத்துவம் இல்லை.

ஆனால் காட்சிகளில் பொருத்தமான

## கே. பாலசந்தர்

இடங்களில் பொருத்தமான குணசித்திரங்களின் வழியாக பிரயோகிக்கப்படும்போது அந்தக் காட்சியின் பரிமாணமே விசுவரூபம் எடுக்கிறது.

உதாரணம் : 'இரு கோடுகள்' திரைப்படத்திலே வருகின்ற 'அச்சா' என்கிற வார்த்தை. அது பிரயோகிக்கப்பட்ட விதத்தை இங்கே நினைவூட்ட விரும்புகிறேன்.

Let us see a clipping from this Film.

கணவனால் கைவிடப்பட்டவளாக, கணவன் வேலை செய்யும் அலுவலகத்திற்கே மேலதிகாரியாக கலெக்டர் ஜானகி வருகிறாள். இன்னொரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு குழந்தை குட்டிகளுடன் நிம்மதியாக வாழ்ந்து வரும் கதாநாயகன் ஜெமினி கணேசன் வாழ்க்கையில் இப்படி ஒரு புயல் அடிக்கிறது. முதல் திருமணச் செய்தியே இரண்டாவது மனைவியிடமிருந்து மறைக்கப்பட்ட நிலையில், கதாநாயகன் இருதலைக் கொள்ளி எறும்பின் நிலைக்குத் தள்ளப்படுகிறான்.

கலெக்டருக்கும் கதாநாயகனுக்கும் ஏதோ தொடர்பு இருப்பதாக அலுவலக வம்பர்கள் கதை கட்டி விடுகிறார்கள்.

இந்த ஊர் வம்பு, மனைவி ஜெயந்தியின் காதுகளுக்குப் போய்ச் சேர, அவள் துடியாகத் துடிக்கிறாள். தன் கணவனிடம் விஷயத்தை வெளிப்படையாகச் சொல்லாமலே கணவனைச் சாடுகிறாள்.

அவளது அழுகையும், தொல்லைகளும், ஏச்சுக்களும் பேச்சுக்களும் பொறுக்க முடியாத நிலையில் "நான் என்ன தவறு செய்தேன் என்று ஒரு வார்த்தையில் சொல்" என்று கணவன் கத்துகிறான்.

மனைவி ஜெயந்தி தனது அகலமான கண்களில் நீர் தளும்ப "அச்சா" என்று சொல்கிறாள்.

அத்தனை வம்பு தும்புகளுக்கும் அடிப்படைக் காரணம் என்னவென்று அந்த ஒரே ஒரு வார்த்தை - 'அச்சா' - கணவனுக்குப் புரிய வைக்கிறது.

படம் பார்க்கும் எல்லோருக்கும் புரிகிறது. ஆம்! இந்த வார்த்தை கலெக்டர் ஜானகி அடிக்கடி உபயோகப்படுத்தும் ஒரு வார்த்தை. 'இரு கோடுகள்' வெளியான நேரத்தில் இந்தக் காட்சியைப் பற்றி குறிப்பிடாதவர்களே இல்லை; எழுதாத பத்திரிகைகளே இல்லை.

இந்த இடத்திலே இந்தக் காட்சியைப் பற்றி நான் விலாவாரியாகக் குறிப்பிடுவதற்கு இன்னொரு காரணம் கூட இருக்கிறது.

உலகெங்கிலும் உள்ள பிரபல இயக்குநர்கள், உலகப் பெயர் பெற்ற இயக்குநர்கள்,

# லைகள்

சத்தியஜித்ரே போன்றவர்கள், காட்சிகளின் முழு வடிவத்தையும் முழுமையாக எழுதி அமைத்துக் கொண்டுதான் படப்பிடிப்பிற்குச் செல்கிறார்கள் என்றும் நான் அப்படிச் செய்யாமல் சில நேரங்களில் படப்பிடிப்பு நடக்குமிடத்திலேயே வசனங்களை எழுதுகிறேன் என்றும் என் மீது நேர்முகமாகச் சிலரும் மறைமுகமாகப் பலரும் குற்றம் சாட்டுவதுண்டு. அப்படிப்பட்ட சமயங்களில் அவர்களுக்கெல்லாம் நான் இந்தக் காட்சியைத்தான் உதாரணமாக எடுத்துச் சொல்வேன்.

ஜெயந்தி குற்றம்சாட்டிப் பேசும் நீண்ட வசனங்களை, ஏற்கெனவே எழுதி வந்தவற்றையெல்லாம் அடித்து விட்டு இப்படி ஒரே வார்த்தையில் மாற்றி அமைக்கப்பட்ட இந்தக் காட்சி மிகப் பெரிய அளவிலே பேசப்பட்டதற்குக் காரணம், அந்த spotலேயே திருத்தி எழுதி shot எடுத்த improvisationதான்.

இதையேதான் ஒரு திரைப்படக் கலைஞர் அற்புதமாக இப்படிச் சொன்னார் :

"A movie has two deaths and three births."

அதாவது, திரைப்படம் எனது தலையினுள் பிறக்கிறது. காகிதத்தில் எழுதும் போது சாகிறது. நடிகர்கள் அவற்றுக்கு உயிர் கொடுக்கும் போது மீண்டும் பிறக்கிறது. படம் பிடித்த பிறகு செல்லுலாயிடுக்குள் மீண்டும் சாகிறது; அவற்றை வரிசைப்படுத்தி திரையிலே பிம்பங்களாக ஒட்டிக் காட்டும் போது அற்புதமாகத் தண்ணீருக்குள்ளிருந்து கிளம்பும் மலர்களாக உயிர் பெற்று வருகிறது.



• இரு கோடுகள் : (படம் உதவி : பிலிம் நியூஸ் ஆனந்தன்)

10

மேலே சொல்லப்பட்ட 'அச்சா' என்கிற ஒரு வார்த்தை போல் இன்னொரு திரைப்படத்திலே உபயோகப்படுத்தப்பட்ட வேறொரு வார்த்தை நேர் எதிரிடையான ஒரு controversy ஐக் கிளப்பி நம் நாட்டுப் பண்பாளர்களுக்கு மத்தியிலே ஒரு புயலையே எழுப்பி விட்டது.

நினைவுபடுத்திக் காட்ட விரும்புகிறேன்.

படம் : அபூர்வ ராகங்கள்.

Let us see this clipping.

மழை பெய்த ஒரு இரவு; தெருவில் அங்கங்கே தண்ணீர் தேங்கியிருக்கிறது. கதாநாயகன் பிரசன்னா (கமலஹாசன்) தனியாக நடந்து வந்து கொண்டிருக்கிறான். எதிர்ப் பக்கமாக ஒரு van வருகிறது. வேகமாகக் கதாநாயகனைக் கடந்து செல்லும் அந்த van கதாநாயகன் மீது சேற்றை வாரி இறைத்து விட்டுச் செல்கிறது. கதாநாயகனைக் கடந்து சென்ற vanஐ நோக்கி ஆத்திரத்தில் அந்த "வார்த்தை"யைச் சொல்கிறான். van கிரீச்சிட்டு நிற்கிறது; பின்னால் வருகிறது; கதாநாயகன் அருகில் நிற்கிறது; அந்த van கதவுகளைத் திறந்து கொண்டு திபுதிபுவென்று ஏழெட்டு முரட்டு இளைஞர்கள் இறங்குகிறார்கள்; கதாநாயகனைச் சுற்றி நின்று கொள்கிறார்கள்; ஒருவன் கேட்கிறான்... "என்னடா சொன்னே?"

சிறிது தயக்கத்திற்குப் பிறகு கதாநாயகன் அதே வார்த்தையைத் திருப்பிச் சொல்கிறான். காட்சி அந்த இடத்தில் cut செய்யப்படுகிறது. இதன் பின்னர் என்ன நடந்த

தென்று காட்டப்படாமலேயே!

தமிழ்த் திரைப்படங்களில் அதுவரை உபயோகிக்கப்படாத அந்த வார்த்தை! பெரும் சர்ச்சைக்கு உள்ளாகிறது. தமிழகத்துத் தூய்மையாளர்கள் கூக்குரலிட்டார்கள்; பண்பாளர்கள் போர்க் கொடி உயர்த்தினார்கள். 'சென்ஸார்' எப்படி இந்த வார்த்தையை அனுமதித்தார்கள் என்று ஏகப்பட்ட பெடிஷன்கள்; சில மொட்டைக் கடிதங்கள். படம் எடுக்கத் தெரியாத சிலரும், எடுத்து தோல்வி கண்ட சிலரும் மறைமுகமாக இந்த சர்ச்சைக்கு ஆதரவு அளித்தார்கள்.

அந்தத் திரைப்படத்தின் தரத்தை யாருமே குறைசொல்ல முடியவில்லை என்பதினால் இதை மட்டும் ஒரு கரும்புள்ளியாக நினைத்து விண்வாதங்கள், பிரதிவாதங்கள் இவைகளில் ஈடுபட்டார்கள். இவர்களது வாதங்கள் அனைத்தும் hypocrisy யின் உச்சம் என்று நான் வாளாவிருந்து விட் டேன். ஆனால் ஒரே ஒரு பத்திரிகையில் மட்டும் இந்தக் குற்றச்சாட்டுக்கான பதிலைச் சொல்லியிருந்தேன் :

"நீங்கள் அடுத்து உடனே வரும் காட்சியைப் பாருங்கள்; காரிலே பைரவி (ஸ்ரீவித்யா) வந்து கொண்டிருக்கிறாள். பிளாட்பாரத்தில் ஒரு இளைஞன் கோரமாக அடிபட்டு ரத்தக் களரியுடன் மூர்ச்சையுற்றிருக்கிறான். பைரவி இறங்கிப் பார்க்கிறாள். ரத்த வெள்ளத்திலே கிடக்கும் அவனைப் பார்த்து அதிர்ச்சியடைகிறாள். அவன் யாரோ; இவன் யாரோவாக இருந்தபோதிலும் அவனை அந்த இடத்திலேயே விட்டு விட்டுப் போக அவளது மனிதாபிமானம் தடுக்கிறது. தனது இல்லத்திற்குக் கொண்டு செல்கிறாள்; டாக்டரை அழைத்து முதலுதவி செய்கிறாள்; அவனைத் தன் வீட்டிலேயே சில நாட்கள் தங்க வைக்கிறாள். இப்படிப் போகிறது கதை!

நான் கேட்டேன்,

சேற்றை வாரி இறைத்துச் சென்றவர்களைப் பார்த்து ஆத்திரமூட்டும் வகையில் இவன் கடுமையான ஒரு வார்த்தையை spontaneous ஆகச் சொல்ல வேண்டும். குற்றுயிரும் குலை உயிருமாக அவனை அடித்துப் போட்டு விட்டுச் செல்கின்ற அளவுக்கு எந்த வார்த்தையைச் சொன்னால் இப்படியொரு ஆத்திரம் வரும்?'

யோசித்துப் பார்த்து நீங்களேதான் ஒரு மாற்று வார்த்தை சொல்லுங்களேன். It is not the word that counts; It is the ultimate effect that is created by this word; that is important for me. அது மட்டுமல்லாமல் அடுத்து மூன்று நிமிடங்களுக்கு நடக்கின்ற ரத்தம் சிந்தும் அருவருப்பான ஒரு சண்டைக் காட்சியை இந்த வார்த்தையை உபயோகித்ததன் மூலம் நான் தவிர்த்திருக்கிறேன்.

The end justifies the means.

இதை மனத்தில் கொண்டுதான் சென்ஸார்காரர்களும் விட்டு விட்டார்கள்" என்று எழுதியிருந்தேன்.

ஆனால் இதற்குப் பிறகு இதே வார்த்தையை அனாவசியமான இடங்களிலெல்லாம் சில படங்களில் சிலர் உபயோகிக்க ஆரம்பித்து, அவை கத்தரிக்கோலுக்கு இரையாயின.

தகாத சில வார்த்தைகள் வேண்டுமென்றே கதாபாத்திரங்களின் வழியாகத் திணிக்கப்பட்டிருக்கிறதா என்கிற அடிப்படை motivation ஐ அலசிப் பார்த்துத்தான் சென்ஸார்காரர்கள் முடிவெடுக்கிறார்கள்.

"மூன்று வார்த்தைகள்" பற்றிய ஒரு clipping போடாமல் இந்த வாரக் கட்டுரை முற்றுப் பெறாது.

படம் : சொல்லத்தான் நினைக்கிறேன்.

மூன்று பெண்களைப் பெற்ற தந்தை (எஸ். வி. சுப்பையா) ஒரு மனநோயாளி.

மூத்தவளைப் பெண் பார்க்கும் படலம் நடைபெறவிருக்கிறது. ஏடாகூடமாகத் தனது தந்தை ஏதாவது பேசி விடப் போகிறாரே என்கிற கவலையில் கடைசிப் பெண் (ஜெயசித்ரா) தந்தையைத் தனிமையில் அழைத்துச் சென்று அவருக்குப் புத்திமதி சொல்கிறாள்.

'என்ன நடந்தாலும் சரி, நீங்கள் வாயைத் திறக்கவே கூடாது' என்று அன்புக் கட்டளையிட, தந்தை அவளிடம் கெஞ்சுகிறார் :

"நான் பெண்ணைப் பெத்தவன்கிற முறையிலே நாலு வார்த்தை கூட பேசலேன்னா ரொம்ப தப்பாயிடும்மா" என்று கெஞ்ச, மகள் (ஜெயசித்ரா) "சரி; பரவாயில்லை! மூணே மூணு வார்த்தைதான் பேசலாம்; அதுக்கு மேலே மூச்சு விடக் கூடாது" என்று பயமுறுத்தி பெண் பார்க்க வந்திருப்பவர்கள் மத்தியில் தந்தையை அழைத்துச் சென்று உட்கார வைக்கிறாள்.

ஒரு பாடல் காட்சியுடன் பெண் பார்க்கும் படலம்! கடைசியில் மூத்தவளைப் பெண் பார்க்க வந்த மாப்பிள்ளை அவளது தங்கை ஸ்ரீவித்யாவைத் தனக்குப் பிடித்திருப்பதாகச் சொல்ல, அங்கே சின்ன வாக்குவாதம் நடைபெறுகிறது.

பொறுமையாக வாயைத் திறக்காமல் இவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த தந்தை (எஸ்.வி. சுப்பையா) "நான் மூணு வார்த்தை பேச ஆசைப்படறேன்; மூணே வார்த்தைதான்" என்று சொல்லி, "எழுந்து போங்கடா முண்டங்களா" என்று மூன்று வார்த்தைகளை மட்டும் சொல்லி காட்சிக்கே முத்தாய்ப்பு வைக்கிறார்.

இந்த மூன்று வார்த்தைகளுக்கு மட்டும், இரைப்பட அரங்கத்தில் கைத்தட்டல் அடங்க முப்பது விநாடிகள் பிடிக்கும்!

(தொடரும்)



உ

ஸ்ரீகலங்காமற்காத்த விநாயகர் துணை

# அருள்மிகு ஆபத்சகாயேஸ்வரர் சுவாமி திருக்கோவில்

ஆலங்குடி - 612 801.

வலங்கைமான் வட்டம், தஞ்சை மாவட்டம்.

(குரு பரிகார ஸ்தலம்)

# குரு பெயர்ச்சி விழா

நிகழும் ஸ்ரீமுக வருஷம் ஐப்பசி மாதம் 18உ (4-11-94) திங்கட்கிழமை அருள்மிகு குருபகவான் துலா ராசியிலிருந்து விருச்சிகம் ராசிக்கு பிரவேசம் செய்கிறார். எனவே கீழ்க்கண்ட இராசி நேயர்கள் தங்களுடைய ஜென்ம நக்ஷத்திரத்திற்கு பரிகாரம் செய்துகொள்வது மிகவும் உத்தமம்.

ராசிகள் : மேஷம், மிதுனம், சிம்மம், கன்னி, விருச்சிகம், தனுசு, கும்பம்.

**அதனை முன்னிட்டு அருள்மிகு குருபகவானுக்கு 16-10-94 முதல் 31-10-94 முடியவும், மீண்டும் 6-11-94 முதல் 1-12-94 முடியவும்**

## இலட்சார்ச்சனை நடைபெறும்

இலட்சார்ச்சனை கட்டணம் : ரூ. 50 (ரூபாய் ஐம்பது)

(அருள்மிகு குருபகவான் உருவம் பொறித்த 2-கிராம் வெள்ளியினால் செய்த டாலர் பிரசாதமாக வழங்கப்படும்)

பிரசாதம் தபாலில் பெற விரும்புவோர் பதிவுத் தபால் கட்டணம் ரூ. 10/- ம் சேர்த்து அனுப்பி பிரசாதம் பெற்றுக்கொள்ளலாம்.

தொகையை மணியார்டர் மூலமாகவோ, டிமாண்ட் டிராப்டாகவோ

**செயல் அலுவலர்**<br>**அருள்மிகு ஆபத்சகாயேஸ்வர சுவாமி ஆலயம்,**<br>**ஆலங்குடி - 612 801.**<br>**வலங்கைமான் வட்டம், தஞ்சை மாவட்டம்.**

என்ற முகவரிக்கு தங்களுடைய பெயர், நட்சத்திரம், லக்னம், ராசி, கோத்திரம் ஆகிய முழு விபரங்களையும் எழுதி அனுப்பி பிரசாதம் பெற்றுக் கொள்ளலாம்.

காசோலைகள் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

மணி ஆர்டரில் தொகை அனுப்புவோர் தங்கள் முகவரியை தெளிவாக மணி ஆர்டர் கூப்பனில் நிரப்பி அனுப்பவும். முகவரி இல்லாத மணி ஆர்டர்கள் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

டிமாண்ட் டிராப்ட் எடுப்போர் கும்பகோணம் கிளை வங்கிக்கு எடுத்து அனுப்பவும்.

ஆலங்குடி : 1) கும்பகோணம் To மன்னார்குடி சாலையில் கும்பகோணத்திலிருந்து 17 கி.மீ. தொலைவில் உள்ளது.
2) தஞ்சாவூர் To நீடாமங்கலம், நீடாமங்கலம் To கும்பகோணம் சாலையில் நீடாமங்கலத்திலிருந்து 8 கி.மீ. தொலைவில் உள்ளது.

SPACE DONATED BY JAYRAM ELECTRICALS PVT.LIMITED, MADRAS-600004.

# வயிற்றெரிச்சல் ஐயா!

◆ சிங்கப்பூர் போன்ற நாடுகளில் உள்ளவர்கள் தம்முடைய வளர்ச்சியைக் காட்டிலும் தம்முடைய சமுதாய வளர்ச்சிக்கும், நாட்டின் வளர்ச்சிக்கும் முன்னுரிமை கொடுக்கின்றார்கள். அவர்களுடைய செயல்களும், நடவடிக்கைகளும் தேச நலன் சார்ந்ததாகவே அமைகின்றது. ஆனால் நாம்? சுயநலமே பெரிதாய்ப் போய் விட்ட நம்மவர்களுக்கு நிர்வாகத்தில் எப்படி நேர்மையும் சத்தமும் வரும்? சிங்கப்பூரிடமிருந்து நாம் கற்க வேண்டியது எவ்வளவோ இருக்க, முதலீட்டை மட்டும் வரவேற்றுப் பயனில்லை.

திருச்சுழி, சுந்தர் அழகேசன்.

◆ என்னது? சிங்கப்பூரில் அரசுக்கு கடிதம் எழுதினால் 2 வாரங்களில் பதில் வருமா? வயிற்றெரிச்சல் ஐயா. இங்கே நாம் எழுதும் கடிதம் அரசுக்குப் போய்ச்சேரவே 2 மாதமாகும். அஞ்சல் துறை அப்படி. அவர்கள் நமக்கு பதிலே எழுதப்போவதில்லை. அரசுத்துறை அப்படி.

இராமேஸ்வரம், மு. முருகேசன்.

◆ பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவை ஒரு நூற்றாண்டுக் காலத்துக்கு மேல் ஆண்டார்கள். பண்புக்கும், நல்ல பழக்க வழக்கங்களுக்கும் உறைவிடமாக விளங்குபவர்கள் ஆங்கிலேயர்கள். ஒரு நூற்றாண்டே கழிந்தும் கூட அவர்களிடமிருந்து கற்க வேண்டியவைகளை நம்மவர்கள் கற்கவில்லையே. இவர்கள்தான் சிங்கப்பூர் மக்களிடமிருந்து நல்லனவற்றைக் கற்றுக் கொள்ளப் போகிறார்களாக்கும்?

சென்னை - 14, பொ. வஜ்ரவேலு.

◆ "ஜெ. விசிட் பின்னே; நமது விசிட் முன்னே!" என தடாலடியாக திண்டுக்கல் நகரைத் தாங்கள் சுற்றி, செய்திகள் சேகரித்த விதம் மிகவும் தடபுடல்தான்!

மதுரை - 10, பி. ராஜசேகரன்.

◆ இந்தக் காலத்திலும் இப்படி ஒரு (திண்டுக்கல் தொகுதி) சட்டமன்ற உறுப்பினரா? அவரின் கோரிக்கையே ஒரு அமைச்சரால் பரிசீலிக்கப்படவில்லை என்றால் சாதாரண மக்களின் நிலை என்னவாகும் என்பது நமக்குப் புலனாகிறது. தொகுதியின் குறைகளை 'கல்கி' மூலம் அனைவரின் கவனத்துக்கும் கொண்டு வந்த திண்டுக்கல் எம்.எல்.ஏ. நிர்மலா தேவி பாராட்டுக்கு உரியவர். முதல்வரின் கவனம் இவர் மீது திரும்புமா? (நல்ல அர்த்தத்துலதாங்க!)

மயிலாடுதுறை, ஜி.ஜி. சரவணன்.

◆ கால் பக்க விளம்பரம் கொடுத்தால் காரியம் நிறைவேறிவிடும், என, கல்கி முதல் பக்கத்தில் சொல்லிய தகவல், பயனுள்ள, பலனுள்ள, ஒன்றாகும் என்பதில் சந்தேகமில்லை!

கும்பகோணம், எஸ்.கே. மூர்த்தி.

◆ "காரியம் ஆக வேண்டுமா, கால்பக்க விளம்பரம் கொடு" என்ற தலைப்பில் வெளியான கட்டுரை தொடர்பாக: பாலாறு தண்ணீர் கிடைக்காத காரணத்தினால், எங்களது கோரிக்கையினை மாண்புமிகு உள்ளாட்சி மற்றும் குடிநீர் அமைச்சர் திரு. செல்வகணபதி அவர்களுக்கும் மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்களுக்கும்தான் அனுப்பினோமே ஒழிய, சமூக நலத்துறை அமைச்சர் அவர்களுக்கு எந்தவிதமான கடிதமும், தந்தியும் அனுப்பவில்லை.

சென்னை - 59,
நிர்வாகி, சிவானந்தா சேவாசிரமம்.

◆ குளிர் பானம் கோகா-கோலா பிறந்த கதை அதன் மாறாத சுவையைப் போன்றே சுவையாக இருந்தது.

லால்குடி, எம். இராஜேந்திரன்.

## வட்டமேஜை

◆ இலவச சிரிப்பு மணைப்பட்டாவை வழங்கி எங்களை விலா நோகச் சிரிக்க வைத்து விட்டீர்களே! பிடியுங்கள் பாராட்டுக்களை!

கச்சனம், ஆர். திருமலை.

◆ வெளிநாடு சென்று பிழைப்பு தேடுவோரை ஒரு நிமிடம் யோசிக்க வைக்கும் சிறுகதை 'வேர்களைத் தேடி'. மிக அருமை.

காவேரிப்பட்டணம், கே. சோமசேகரன்.

◆ பட்டுக்கோட்டை பிரபாகரின் இமைக்காத இரவு தொடர் கதையை இமைக்காமல் படிக்கிறேன். துடிப்பான ஆரம்பம். சபாஷ்!

திருச்சி - 21, எம். கணேசன்.

◆ பட்டுக்கோட்டை பிரபாகரின் இமைக்காத இரவு ஆரம்பமே படு சூப்பர். நாலுவாரத்தில் முடிந்து விடுமே என்பதுதான் ஏக்கம் தருகிறது!

அத்திப்புலியூர், உதயன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka